# அஹ்மதிய்யத்

## உலகிற்கு வழங்கியது என்ன?

ஆக்கம்

**மவ்லானா அத்தாவுல் முஜீப் ராஷிது**

தமிழாக்கம்

**முஅல்லிம் M. முஸ்ஸம்மில்**

வெளியிடுவோர்

தமிழக புத்தக வெளியீட்டுக் குழு (வட மண்டலம்)

**அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்**

11, முதல் பிரதான சாலை, யு.ஐ. காலனி,
கோடம்பாக்கம், சென்னை- 600 024.



**Ahmadiyyath Ulagirkku Vazhangkiyathu Enna?**

Tamil version of

**Ahmadiyyath Nay Duniya Ko Kya Diya?**

**By Moulana Athaaul Mujeeb Raashid**

Translated by :

**Muallim M. Muzzammil**

**First Edition : February 2011**

**ISBN: 978 81 7912 297 6**

**Copies : 1000**

This book was released by **Moulana Muhammad Inaam Gouri Sahib,** the Chief Secretary of Ahmadiyya Muslim Jamaath in India, during the Tamilnadu North Zone Zonal Conference held at Coimbatore on 27th February 2011

Published by :

**Tamilnadu Book Publishing Committee (North Zone)**

**AHMADIYYA MUSLIM JAMA'ATH**
No. 11, First Main Road,
United India Colony, Kodambakkam,
Chennai - 600 024. Tamilnadu.
**Website: www.alislam.org\tamil**
**E-mail: amjchennai@yahoo.in**

For:

**NAZAARAT NASHR-O-ISHAAT**
Sadr Anjuman Ahmadiyya, Qadian

بسم الله الرحمن الرحيم

# பதிப்புரை

அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன ? எனும் இந்நூல் 2003 ஆம் அண்டு இலண்டன் ஆண்டு மாநாட்டின் போது மதிப்பிற்குரிய மவ்லானா அத்தாவுல் முஜீப் ராஷிது அவர்களால் நிகழ்த்தப்பட்ட ஒரு சொற்பொழிவாகும். இத்தலைப்பின் முக்கியத்துவத்தையும் தேவையையும் கருத்தில் கொண்டு பலமொழிகளில் வெளிவந்துள்ள இந்நூல் தற்போது தமிழ் கூறும் நல்லுலகிற்காக சமர்பிக்கப்படுகிறது. இந்நூல் மவ்லானா அவர்கள் முழு உலகிலும் அஹ்மதி முஸ்லிம்களிடம் அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன? என்று முன்வைக்கப்படும் கேள்விக்கான விடையை பல கோணங்களில் உயிரோட்டத்தோடு சுருக்கமாகவும், திருப்திகரமாகவும், எளிமையாகவும், மறுபேச்சிற்கு இடமின்றி வழங்கியுள்ளார்கள். அஹ்மதிய்யத்தின் உண்மை நிலையை ஆராய்வதற்கு இந்நூல் பேருதவியாக, சரியான இலக்கிற்கு அவர்களை கொன்டு போய் சேர்க்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. அல்லாஹ் இந்நூலை எல்லா மக்களுக்கும் மிகுந்த பயனுள்ளதாக ஆக்கிவைப்பானாக.

இந்நூலை தமிழில் மொழியாக்கம் செய்து தந்த கோயம்புத்தூர் ஜமாஅத்தின் கொள்கை பரப்புனர் முஅல்லிம் M. முஸ்ஸம்மில் அஹ்மது அவர்களுக்கும், அதை தொடர் கட்டுரையாக வெளியிட்ட நபி வழி மாத இதழுக்கும், அதனை மூல நூலுடன் ஒப்பிட்டு சரிபார்த்து தந்த புத்தக சரிபார்ப்பு குழுவினர்கும், இதனை அச்சிட பணியாற்றிய அனைவருக்கும் அல்லாஹ் நற்கூலியை வழங்குவானாக.

வெளியீட்டாளர்.

27.02.2011

# முன்னுரை

இங்கிலாந்து அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் 37வது ஆண்டு மாநாடு 25, 26,27 ஜூலை 2003 அன்று இஸ்லாமாபாத்தில் (டெலிஃபோர்ட், ஸரே, இலண்டன்) நடைபெற்றது. இம்மாநாட்டிற்கு ஐந்தாவது கிலாபத்தில் இங்கிலாந்தில் நடைபெற்ற முதல்ஆண்டு மாநாடு எனும் சிறப்பும், ஹஸ்ரத் ஐந்தாவது கலீஃபத்துல் மஸீஹ் (அய்யதஹுல்லாஹுத்தஆலா பினஸ்ரிஹில் அஸீஸ்) அவர்கள் கலீஃபத்துல் மஸீஹாக பங்கேற்ற முதல் ஆண்டு மாநாடு என்ற வகையிலும் இந்த ஆண்டுமாநாட்டிற்க்கு பலசிறப்பு உண்டு. அவர்களின் அழுத்தமான மற்றும் உள்ளங்களில் ஈமானின் துடிப்பை அதிகரிக்க கூடிய சொற்பொழிவுகள் மாநாட்டில் பங்கேற்றவர்களின் அறிவு மிகுதிக்கும் உறுதிபாட்டிற்கும் காரணமாக அமைந்தன. எல்லாப்புகழும் இறைவனுக்கே.

இந்த வரலாற்று சிறப்பு மிக்க மாநாட்டில் இந்த எளியவனுக்கு ''அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன?'' என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றும் வாய்ப்பு கிட்டியது. சொற்பொழிவுப் பணிக்காக ஆயத்தமாகும் முன்பு ஹஸ்ரத் ஐந்தாவது கலீஃபத்துல் மஸீஹ் (அய்) அவர்களின் துஆவிற்காக விண்ணப்பித்திருந்தேன். அவர்கள் பதில் எழுதியிருந்தார்கள்:

''உங்கள் கடிதம் கிடைத்தது, இறைவன் உங்களது சொற்பொழிவை சிறந்த வண்ணம் தயார்செய்யும் வாய்ப்பை வழங்குவானாக. தங்கள் அறிவை பிரகாசமாக்கி, நாவை சீராக்குவானாக.''ரப்பிஷ் ரஹ்லீ சத்ரி வயஸ்ஸர்லி அம்ரி'' (இறைவா எனது நாவை சீராக்கி என்பணியை எளிதாக்குவாயாக) எனும் துஆவை மீண்டும் மீண்டும் ஓதியவாறு சொற்பொழிவிற்கான ஆயத்த பணிகளை துவங்கிவிடுங்கள். இறைவன் உங்களுக்கு அருளும் உதவியும் புரிவானாக.''

எல்லாப்புகழும் இறைவனுக்கே உரித்தாகுக. இந்த துஆவின் அருளால் இறைவன், எனது ஒவ்வொரு அடிச்சுவட்டிலும் எனக்கு வழிகாட்டி உதவி புரிந்தான்.

பல ஜமாஅத்தார்கள் இத்தலைப்பின் முக்கியத்துவம் மற்றும் நிரந்தர பயனளிப்பை கருத்தில் கொண்டு இச்சொற்பொழிவை நூல்வடிவில் வெளியிட்டால் நன்றாக இருக்கும் என்ற எண்ணத்தை வெளிப்படுத்தியிருந்தார்கள். எனவே தான் இச்சொற்பொழிவு என்னால் மீண்டும் ஒரு முறை சரிபார்க்கப்பட்டு சில முக்கிய திருத்தங்களுடன் தற்போது நூலாக வழங்கப்படுகிறது.

இறைவன் இம்முயற்சியை ஏற்று இந்நூலின் வெளியீட்டை எல்லா வகையிலும் மிகுந்த பயனுள்ளதாகவும் அருளுக்குரியதாகவும் ஆக்குவானாக. ஜமாஅத்தை சாராத நண்பர்களுக்கும் திருப்தியளிக்கக்கூடியதாக ஆக்கி, அவர்களுக்கு உண்மையை ஏற்கும் வாய்ப்பு கிடைகட்டும் என இறைவனிடம் வேண்டிக்கொள்கிறேன்.

இப்படிக்கு

**அத்தாவுல் முஜீப் ராஷிது**

14 ஆகஸ்டு 2003 — இமாம் ஃபஸ்ல் பள்ளிவாசல், இலண்டன்

بسم الله الرحمن الرحيم

# அஹ்மதிய்யத்

## உலகிற்கு வழங்கியது என்ன?

''அவனே தனது தூதரை நேர்வழியுடனும் உண்மையான மார்க்கத்துடனும் இதனை அவன் எல்லா மார்க்கத்தின் மீது வெற்றி பெறச் செய்வதற்காக அனுப்பினான். (இறைவனுக்கு) இணைவைப்போர் (இதை) எந்த அளவுக்கு வெறுத்தாலும் சரியே.'' (திருக்குர்ஆன் 61:10)

அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன என்ற இந்த தலைப்பு உண்மையில் அஹ்மதி அல்லாதவர்களிடமிருந்து எழுப்பப்படும் ஒரு கேள்வியாகும். இக்கேள்வியில் வியப்பும் இருக்கிறது. தேடலும், வேண்டுகோளும், மறைமுக ஆட்சேபணையும் இருக்கிறது. முஸ்லிம்கள் பொதுவாக, நமது இஸ்லாமிய மார்க்கம் அனைத்து விதத்திலும் முழுமையானதாகும்; இந்த முழுமையான மார்க்கத்திற்குப் பிறகு அஹ்மதிய்யத் நமக்கு எவ்வாறு அதிகப்படியாக ஒன்றை வழங்கி விடமுடியும் என்ற கேள்வியை எழுப்புகின்றனர். அல்லது அஹ்மதிய்யத் உலகிற்கு புதிதாக எதையும் வழங்கவில்லை; இஸ்லாத்தின் தூதை மட்டுமே வழங்கியுள்ளது என்று கூறப்படுமென்றால் அதற்கு அவர்களது பதில், எங்களுக்கு இஸ்லாம் மட்டுமே போதுமானதாகும்;





அஹ்மதிய்யத் தேவையில்லை என்பதாகும். மேலும் முஸ்லிமல்லாதவர்கள் இஸ்லாத்திற்கும் அஹ்மதிய்யத்திற்கும் உள்ள வேறுபாடு என்ன? இஸ்லாத்திலிருந்து தனித்து நாங்கள் அதன் மீது செலுத்துகின்ற அளவுக்கு அப்படியென்ன புதிய விஷயத்தை அஹ்மதிய்யத் வழங்கியுள்ளது என்று அறிந்து கொள்ள விரும்புகின்றனர். இந்த இரண்டு விதமான கேள்விகளுக்கும் விரிவான பதில் அவசியமாகும். இதனை விரிவாக இயன்றவரை எடுத்துக் கூற முயற்சி செய்வேன். இன்ஷா அல்லாஹ்.

### அஹ்மதிய்யத் என்றால் என்ன?

அஹ்மதிய்யத் என்பது இஸ்லாத்தை உயிர்ப்பிக்கவும், உலக அளவில் இஸ்லாத்தை வெற்றி கொள்ளச் செய்யவும், அல்லாஹ்வின் கட்டளை மற்றும் உதவியுடன் ஏற்படுத்தப்பட்ட ஓர் உலகளாவிய அமைப்பாகும். அஹ்மதிய்யத் எப்படிப்பட்ட செடியென்றால் அதை அதன் உண்மையான எஜமானனே தனது கையால் நட்டி அதற்கு நீரூற்றி பாதுகாக்கின்றான். அவனது கையால் ஏற்படுத்தப்பட்ட வானத்தின் இந்த அமைப்பு உலகில் பரவும், முன்னேறும், எது வரையெனில் இறுதியில் முழு உலகையும் தனக்குள்ளாக்கிவிடும் என்பது அந்த ஆற்றல் படைத்த, நிலைத்து நிற்கக்கூடிய இறைவனது வாக்குறுதியாகும்.

அஹ்மதிய்யத் என்பது அல்லாஹ்வின் வாக்குறுதி நிறைவேறும் வேளை நெருங்கிவிட்டது என்ற நற்செய்தியை தாங்கி நிற்கும் ஓர் அமைப்பாகும். அல்லாஹ் தனது வாக்குறுதிக் கேற்றவாறு ஆகரீன்களின் - பின்னவர்களின் காலகட்டத்தில் நமது எஜமானர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்)அவர்களின் எளிய அடிமையும், மாபெரும் நேசரும் விசுவாசியுமான ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்களை வாக்களிக்கப்பட்ட மஸீஹாகவும் இமாம் மஹ்தியாகவும் தேர்ந்தெடுத்தான். அன்னாரது வருகையின் நோக்கம் இஸ்லாத்தை உயிர்ப்பித்தல், இஸ்லாத்தைப் பரப்புதல், மற்றும் இஸ்லாத்தை (இதர மார்க்கங்களின் மீது) வெற்றி கொள்ளச் செய்தலேயன்றி வேறில்லை.

அல்லாஹ்வின் வார்த்தையையும் அவனது தெள்ளத் தெளிவான வசனத்தையும் கொண்டது தூய குர்ஆன் ஆகும். இதனை அடிப்படையாகக் கொண்ட இஸ்லாத்தின் போதனைகள் அனைத்து விதத்திலும் முழுமையானதும் இறுதிநாள் வரை

அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன?

பாதுகாக்கப்பட்டதுமாகும். இதில் எவ்வித மாற்றத்திற்கோ கூட்டல் குறைத்தலுக்கோ இடமில்லை. எவ்வித புதிய மார்க்கமும் இனிவரமுடியாது. அதேபோல் எவ்வித (புதிய ஷரீஅத்தும் இனி செல்லாது. ஆகரீன்களின் காலகட்டத்தில் அக்காலத்தின் முஸ்லிம்கள் இஸ்லாத்தை மறந்து விடுவார்கள். தனது மனதில் புனையப்பட்ட கொள்கைகள் மற்றும் செயல்களுக்கு இஸ்லாத்தின் பெயரை வழங்க ஆரம்பித்து விடுவார்கள் என்றும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முன்னறிவித்திருந்தார்கள். இவ்வாறான நிலை தோன்றிவிடும் போது அளவற்ற அருளானனும் மேன்மேலும் கருணை காட்டுபவனுமாகிய இறைவன் தனது நேசத்திற்குரிய நபி (ஸல்) அவர்களின் பெயர் கூறி அழைக்கும் இந்த மிகச் சிறந்த சமுதாயத்தை அனாதையாக விட்டு விடமாட்டான் என்றும் முன்னறிவிப்பில் கூறப்பட்டுள்ளது. அப்போது அவர்களை அரவணைத்து சீர்திருத்துவதற்காக இமாம் மஹ்தி (அலை) அவர்களை அல்லாஹ் எழுப்புவான். அவர் மார்க்கத்தை உயிர்ப்பிப்பார் ஷரீஅத்தை நிலை நாட்டுவார் என்ற முன்னறிவிப்பிற்கேற்ப மார்க்கத்தை உயிர்ப்பிப்பார். இஸ்லாமிய ஷரீஅத்தை நிலைநாட்டுவார். அவர் தனது மகத்தான தூய ஆற்றல்களைக் கொண்டு பெயரளவிலுள்ள இதே முஸ்லிம்களை செயல்ரீதியான முஸ்லிம்களாக மாற்றுவார். மேலும் இந்த ஆன்மீக புரட்சி மற்றும் உண்மை இஸ்லாத்தை உலகளவில் பரப்புவதன் மூலம் இறுதியாக முழு உலகின் மீதும் இஸ்லாம் மேலோங்கிவிடும்.

அல்லாஹ்வின் இவ்வனைத்து வாக்குறுதியும் முழுமையடைந்து எவர் வருகை தருவதாக வாக்களிக்கப்பட்டிருந்ததோ அவர் வந்து விட்டார் என்ற உண்மையை பறை சாற்றுவதற்குப் பெயர் தான் அஹ்மதிய்யத் ஆகும். அவர் வருகை தந்து மிக மகத்தான முறையிலும், கம்பீரத்தோடும் வாக்குறுதியில் கூறப்பட்டுள்ள அனைத்தையும் செய்து காண்பித்து விட்டார். அஹ்மதிய்யத் உலகிற்கு இஸ்லாத்திலிருந்து விலகி எதனையும் வழங்கி விடவில்லை; அவ்வாறு வழங்கி விடவும் முடியாது. ஏனெனில் இஸ்லாம் அனைத்து விதத்திலும் முழுமை பெற்ற மார்க்கமாகும். ஆயினும் அஹ்மதிய்யத் உலகிற்கு உண்மையான இஸ்லாத்தை வழங்கியுள்ளது. உயிருள்ள இறைவனையும், உயிருள்ள ரசூலையும் புரிய வைத்துள்ளது. மேலும் உயிருள்ள வேதத்தைப் பற்றி உயிருள்ள நம்பிக்கையை வழங்கியுள்ளது. அஹ்மதிய்யத்





காலத்திற்கு என்ன தேவையோ அவையனைத்தையும் வழங்கியுள்ளது. அஹ்மதிய்யத் கொள்கைகளையும் செயல்களையும் சீர்திருத்தியுள்ளது. அஹ்மதிய்யத் உலகிற்கு சரியான இஸ்லாமிய போதனைகளைப் பற்றிய ஞானத்தை வழங்கியது. பிற மார்க்கங்களின் மீது இஸ்லாத்தின் முழுமையான வெற்றிக்கு அடித்தளம் அமைத்தது. இஸ்லாமிய வாழ்க்கையின் உயிருள்ள செயல் முன் மாதிரியை காண்பித்தது. அஹ்மதிய்யத் தூய முன்னோர்களின் வரலாற்றை நினைவு கூர்ந்தவாறு தன்னைச் சார்ந்தவர்களின் மத்தியில் ஒரு தூய ஆன்மீக புரட்சியை உருவாக்கியது. சுருக்கமாக இவ்வனைத்து சாதனைகளையும் செய்து குறிக்கோளை அடைந்த பின்புதான் காலத்தின் அந்த இமாம் இவ்வுலகிலிருந்து விடைபெற்றார். இன்று அன்னாரது ஜமாஅத் உலகின் சீர்திருத்தம், மனித இனத்தின் தொண்டு மற்றும் இஸ்லாத்தின் உண்மையான துடிப்புடன் கீழ் வரும் இப்புனித வாக்கியத்தை ஏந்தியவாறு முழு ஆர்வத்துடன் செயலாற்றுகிறது;

''உண்மைக்கு நாங்கள் புகழாரம் சூட்டியே தீருவோம். அதற்காக நாங்கள் பூமியை அசைக்க நேர்ந்தாலும் சரியே''.

அஹ்மதிய்யத் எப்போதும் பூத்துக்குலுங்கும் ஒரே மரமாகும். இதை உண்மை எஜமான் தன் கையினாலேயே நாட்டியுள்ளான். அதன் கனிகள் இனிப்பானவையும் உலகம் தழுவியவையுமாகும். பொதுவாக ஒரு மரத்தில் ஒரே விதமான கனிகள் மட்டுமே காய்க்கும். ஆனால் இது வியப்பான மரமாகும். இதில் அனைத்து விதமான புத்தம்புதிய கனிகள் காய்க்கின்றன. மேலும் கனி காய்ப்பதற்கென குறிப்பிட்ட காலம் ஒன்றும் கிடையாது. எப்போதும் அதன் கிளைகளில் தித்திக்கும் கனிகள் காய்த்து குலுங்கிக் கொண்டேயிருக்கும். இது புதிதாக உயிர்ப்பிக்கப்பட்ட இஸ்லாம் எனும் மரமாகும். இது அஹ்மதிய்யத் எனும் உயிர் வழங்கும் மரமாகும். இது ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உண்மையான அடிமை எங்களது கண்ணியமிக்கத் தலைவர் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் தோற்றத்தை வெளிப்படுத்தும் மரமாகும். இது தூய மரமாகும். இதன் அருளின் தொடர், காலம், இடம் ஆகிய எல்லைகளுக்கு அப்பாற்பட்டதாகும். இது எத்தகைய ஓர் உயிருள்ள மரமென்றால் இதன் மீது ஒருபோதும் இலையுதிர் காலம் வராது. இம்மரம்

ஆபத்தான சூறாவளிக் காற்றிலும் இன்னும் வேகமாக பரவி பூத்து காய்த்துக் கனியை வழங்கக் கூடியதாகும். எவர் இதை வெட்டத் துணிவாரோ அவரே வெட்டப்படுவார். எவர் இதற்கு துன்பம் விளைவிக்க முயல்வாரோ அவரே துன்பத்திற்குள்ளாகி தனது செயலில் தோல்வியைத் தழுவி காணாமல் போய்விடுவார்.

இந்த அருளுக்குரிய மரம் எவ்வாறானதென்றால் இதை நாட்டியவன் இறைவனாவான். இதன் பாதுகாப்பு மற்றும் முன்னேற்றத்தின் பொறுப்பு அதே ஆற்றல் மற்றும் வல்லமையுள்ளவனுடையதாகும். அவன் அனைத்து உலகங்களின் எஜமானன் ஆவான். எவ்வாறு பூமியிலுள்ளவற்றையும் வானத்திலுள்ள நட்சத்திரத்தையும் எண்ண இயலாதோ அவ்வாறே அஹ்மதிய்யத் எனும் மரத்தின் கனிகளை எண்ணுவதும் சக்திக்கு அப்பாற்பட்டதாகும். அஹ்மதிய்யத்திற்கு சாதகமாக வெளிப்படக் கூடிய வானத்தின் அடையாளங்கள், பூமியின் அடையாளங்கள் போன்றவற்றை எண்ணுவதென்பது சாத்தியமில்லாததாகும். அஹ்மதிய்யத் முழு உலகிற்கும் வழங்கியுள்ள அருள்கள், அபிவிருத்திகள், அருட்கொடைகள் மற்றும் காய்த்துக் கொண்டே செல்லும் இம்மரத்தின் சுவையான கனிகள் போன்றவற்றை எண்ணுவதற்கு முயற்சி வேண்டுமானால் செய்யலாம்; ஆனால் அவற்றை ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கைக்குள் கொண்டு வருவதென்பது எவ்வழியிலும் சாத்திய மற்ற ஒன்றாகும்.

இஸ்லாத்தின் உலகளாவிய வெற்றியின் மாபெரும் நோக்கத்திற்காக அஹ்மதிய்யத் என்ன செய்துள்ளது? மேலும்அஹ்மதிய்யத் உலகிற்கு என்ன வழங்கியுள்ளது? இது எவ்வாறான ஒரு கேள்வியென்றால் இதற்கு பல்வேறு பதில்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றும் தனக்குள் உள்ளத்தை கவர்ந்திழுக்கும் தன்மையையும் பேரானந்தத்தையும் அடக்கியுள்ளது. ஏனெனில் ஒவ்வொரு பதிலும் உண்மையில் அஹ்மதிய்யத்தின் அழகிய முகத்திலிருந்து ஏதேனும் ஒரு வழியில் திரையை விலக்கி காண்பிப்பதாகவும், வானத்தின் உண்மையான தூதின் அழகை வெளிப்படுத்துவதாகவும் இருக்கிறது.

## அஹ்மதிய்யத் உயிருள்ள இறைவனை வழங்கியுள்ளது

அல்லாஹ்வின் இருப்பின் மீது ஈமான் மற்றும் உறுதி கொள்வதென்பது உண்மையில் மார்க்கத்தின் அடித்தளமும்





ஆன்மீகத்தின் முக்கிய குறிக்கோளுமாகும். இது இல்லையேல் மார்க்கத்தின் தோற்றமே சிதைந்துவிடும். இஸ்லாம் இறைவனது இருப்பை ஓர் உயிருள்ள உண்மையைப் போன்று முன்வைத்துள்ளது. அவன் இம்முழு பிரபஞ்சத்தின் படைப்பாளனும் எஜமானனும் அனைத்து உலகங்களின் இறைவனுமாவான். அந்த இறைவனை காண்பதென்பது இவ்வுலகில் சாத்தியமானதேயாகும். இஸ்லாம் எடுத்து வைத்திருக்கும் இறைவன் ஓர் உயிருள்ள இறைவனாவான். மேலும் அவன் தானும் உயிருடன் இருந்து பிறவற்றையும் உயிருடன் என்றென்றும் நிலைத்திருக்கச் செய்யும் இறைவனாவான். அவனது இருப்பிற்கான ஓர் சான்று என்னவென்றால் அவன் தனது அடியார்களின் துஆக்களை கேட்கவும் அதற்கு பதிலளிக்கவும் செய்கிறான்.

அல்லாஹ் கூறுகிறான்: உத்வூனீ அஸ்தஜிப் லகும் *(அதிகாரம் : அல்மு:மின், வசனம் : 61)*

அதாவது என் அடியார்களே! என்னை அழையுங்கள். நான் உங்களது அழைப்பை கேட்பவனாவேன்.

உண்மையான ஈமானுடன் உறுதியெனும் பாறையின் மீது வலுவோடு நிலைத்திருக்கும் பட்சத்தில் உங்களுக்கு வஹி, இல்ஹாம் (இறையறிவிப்பு) எனும் செல்வம் வழங்கப்படும். மேலும் உங்களால் வானவர்களோடு இவ்வுலகிலும் மறுமையிலும் பேசவும் முடியும் என்ற இறை வாக்குறுதியும் உள்ளது. இருந்தும் பரிதாபம்! இந்த ஆகரீன் காலகட்டத்தில் முஸ்லிம்களிடம் (இஸ்லாத்தின்) கொள்கைகள் மற்றும் செயல்பாடுகளில் பலவீனம் ஏற்படத் துவங்கியதும் அவர்கள் இவ்வழகிய போதனைகளை ஒட்டுமொத்தமாக மறந்து விட்டார்கள். அழைப்பை ஏற்று பதிலளிக்கக் கூடிய உயிருள்ள இறைவனின் மீதுள்ள இவர்களது ஈமான் மறைந்து விட்டது. இறைவனது சந்திப்பு, வஹி, இல்ஹாம் போன்றவற்றை மறுப்பவர்களாகிவிட்டனர். இவ்வனைத்து விஷயங்களும் திருக்குர்ஆனில் அழுத்தந்திருத்தத்துடன் கூறப்பட்டுள்ளன. இவை உண்மையில் இஸ்லாத்தை அனைத்து மார்க்கங்களிலிருந்தும் வேறுபடுத்திக் காட்டுகின்றன. இருந்தும் பரிதாபம்! இக்காலத்து முஸ்லிம்கள் இவ்வனைத்து விஷயங்களிலிருந்தும் ஒன்றுமறியாதவர்களாக விலகி விட்டனர்.

இறைவனது அழகிய இருப்பிற்கான உள்ளங்களை கவரும் உரையாடல்கள் அவர்களின் மஜ்லிஸுகளிலிருந்து மறையத் துவங்கிவிட்டது. இறைவனது உயிருள்ள உரையாடலைப் பற்றி பேசுவதற்கு எவருமில்லை. துஆ ஏற்றுக் கொள்ளப்படுவதை கேள்விப்படுவதென்பதும் ஒரு பழைய கதையாகிவிட்டது. இந்த இருள் நிறைந்த நம்பிக்கையிழந்த நிலையில் காதியான் எனும் எவராலும் அறியப்படாத குக்கிராமத்திலிருந்து மிகவும் வல்லமையுடன் தவ்ஹீதின் இம்முழக்கம் மேலோங்கியது:

**''அந்த இறைவன் இப்போதும் தான் நாடுபவரை (தன்னுடன்) பேசக்கூடியவராக ஆக்குகின்றான்.**

அவன் எவரை நேசிக்கின்றானோ அவரோடு இப்போதும் பேசுகின்றான்''

இந்த கம்பீரமான அறிவிப்பு உலகளாவிய அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் தோற்றுனர் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுடையதாகும். அன்னார் உள்ளம் உடைந்த முஸ்லிம்களுக்கு, நமது இறைவன் உயிருள்ளவன்; அவனது அன்பான, அழகிய பண்புகளில் எந்தப் பண்பும் கால சுழற்சியினால் முடிவுறாதவை, அவன் முன்பு செவியுற்றதைப் போல் இன்றும் செவியுறுகிறான். அவன் முன்பு பேசியதைப் போல் இன்றும் பேசுகிறான் என்ற நற்செய்தியை வழங்கினார்கள். அவர்கள் கூறினார்கள்:

''எதன் மூலம் உயிருள்ள இறைவன் கிடைக்கின்றானோ அதுவே உயிருள்ள மார்க்கமாகும். உயிருள்ள இறைவன் யாரென்றால் அவன் நமக்கு நேரடியாக இறையறிவிப்பை இறக்க வேண்டும் அல்லது குறைந்த பட்சம் நாம் நேரடியாக இறையறிவிப்பை இறக்கக் கூடிய (இறை)வனைப் பார்க்கவேண்டும். எனவே நான் மழு உலகிற்கும் நற்செய்தியை அறிவிக்கின்றேன். அந்த உயிருள்ள இறைவன் இஸ்லாத்தின் இறைவனேயாவான்.'' *(மஜ்மூஆ இஷ்திஹாராத், இலண்டன் பதிப்பு 1984, தொகுதி2, பக்கம் - 311)*

அன்னார் தன்னையும்தனது சொந்தஅனுபவத்தையும் ஆதாரமாக முன்வைத்து, பாருங்கள்! இறைவன் இவ்வருட் கொடையை எனக்கு வழங்கிவிட்டான் என்ற நற்செய்தியை உலகிற்கு வழங்கினார்கள்.





அவர்கள் கூறினார்கள்:

இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளாமல் இறைவனுடன் உயிருள்ள தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள முடியாது. இதுவன்றி இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதென்பது ஒருபோதும் சாத்தியமற்றதாகும். வாருங்கள்! உயிருள்ள இறைவன் எங்கே இருக்கின்றான், எந்த சமுதாயத்துடன் இருக்கின்றான் என்பதை நான் உங்களுக்கு தெரியப்படுத்துகின்றேன். அவன் இஸ்லாத்துடன் இருக்கின்றான். தற்போது இஸ்லாம், மூசாவுடன் இறைவன் பேசிய இடமாகிய தூர் மலையாக இருக்கிறது. நபிமார்களுடன் பேசிய அந்த இறைவன் பிறகு அமைதியாகிவிட்டானா? இன்று அவன் ஒரு முஸ்லிமின் உள்ளத்துடன் உரையாற்றுகின்றான்''. *(ரூஹானி கஸாயின் இலண்டன் பதிப்பு 1984, தொகுதி-11, இணைப்பு அன்ஜாமே ஆதம் பக்கம் - 62)*

அன்னாரின் இந்த அறிவிப்பு ஒரு புரட்சிகர அறிவிப்பாக இருந்தது. இது மார்க்க உலகத்தில் ஒரு துடிப்பை உருவாக்கிவிட்டது. அல்லாஹ்வின் இருப்பை தெரியப்படுத்திய, சாட்சி பகர்கின்ற இவ்வறிவிப்பு சக்திவாய்ந்த ஒருகாந்தமாக நிரூபணமாகியது. இதன் பக்கம் நல்லியல்பைக் கொண்ட மக்கள் கூட்டம் கூட்டமாக ஈர்க்கப்பட்டு இவ்வாற்றலின் அருட்கொடையால் நிரப்பப்பட்டு இறை தொடர்புடைய மனிதர்களாகி விட்டனர். இவர்கள் உலகிற்கு இறைவனை காண்பிக்கும் ஒரு வழியாக உருவெடுத்த தூய கூட்டத்தினர்களாவார்கள்.

அஹ்மதிய்யத்தின் மூலமாக அல்லாஹ் உலகிற்கு கண்ணியமிக்க வாக்களிக்கப்பட்ட மஸீஹையும் இமாம் மஹ்தியையும் வழங்கி உலகின் மீது மாபெரும் அருள் செய்துள்ளான். அன்னார் உயிருள்ள இறைவனை தெரியப்படுத்தினார்கள். உயிருள்ள இறைவனின் உயிருள்ள அற்புதங்களின் மீது உயிருள்ள ஈமான் மற்றும் உறுதியை ஏற்படுத்தினார்கள். தன்னை இறைவனின் இருப்பிற்கான ஓர் உயிருள்ள சான்றாக முன் வைத்தார்கள். மேலும் தன்னை ஏற்றுக் கொண்டுள்ளவர்களின் மத்தியில் தனது மாபெரும் தூய ஆற்றல்களின் மூலம் எவ்வாறான தூய புரட்சியை உருவாக்கினார்களென்றால் அவர்கள் இறைவனை வெளிப்படுத்துபவர்களாக மாறிவிட்டனர். அஹ்மதிய்யத் இவ்வாறான இறைவனை

வெளிப்படுத்தும் தூயவர்களின் அதிக எண்ணிக்கையிலான ஒரு கூட்டத்தை உலகிற்கு வழங்கியுள்ளது. வாழ்வைத்தரும் இவர்களின் அனுபவங்கள் எப்போதும் மனிதசமுதாயத்திற்கு இறைவனை வெளிப்படுத்தும் வழிகளை வெளிச்சமிட்டுக் காட்டியவாறே இருக்கும்.

ஆயிரக்கணக்கான உதாரணங்களிலிருந்து ஓர் உதாரணத்தை எடுத்துரைக்கின்றேன். ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் ஒரு சஹாபி ஹஸ்ரத் மௌலவி முஹம்மது இல்யாஸ்கான் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்; கிலாத் பிரதேசத்தின் காஸியாக இருந்த, அல்கஸாத் அப்துல் அலி அக்வந்ஸாதா என்பவர் மஸ்தூங் எனும் இடத்தில் ஒரு பெரிய கூட்டத்தில் அன்னாரை நோக்கி, நான் தங்களிடம் ஒன்றைக் கேட்டுக் கொள்கிறேன். அனைத்து மாநிலங்களிலும் எந்த ஒரு ஆன்மீகத் தலைவரும் தங்களுக்கு கிடைக்கவில்லையா என்ன? பஞ்சாப் சென்று, ஒரு பஞ்சாபி, மிர்ஸா குலாம் அஹ்மது காதியானியிடம் பைஅத் செய்துள்ளீர்களே? எனக் கேட்டார். இதற்கு ஹஸ்ரத் மௌலவி சாஹிப் (ரலி) அவர்கள், ஈமான் நிறைந்த உணர்வுடன் பதிலளித்தார்கள்: அவர்கள் கூறினாகள்: அது கேட்கத் தகுந்தது.

''உண்மையில் விஷயம் என்னவென்றால் அக்வந்ஸாதா சாஹிப்! என்னிடமிருந்து என் இறைவன் காணாமல் போய்விட்டிருந்தான். நான் அனைத்து மார்க்கங்களிலும் அவனை தேடியலைந்தேன். அனைத்து மார்க்கங்களும் என்னை பழைய கதைகளின் பக்கமே இழுத்துச் சென்றன. நான் அனைவரிடமும் அந்த இறைவன் இப்போது பேசுகின்றானா எனக் கேட்டேன். அதற்கு இப்போது அவன் பேசுவதில்லை எனக் கூறினர். நான் முஸ்லிம்களின் எழுபத்தி இரண்டு பிரிவுகளிலுமுள்ள ஒவ்வொருவரிடம் சென்றேன். அவர்களும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பின் இறைவன் இப்போது பேசுவதில்லை; வஹியின் வாசல் முற்றிலும் அடைபட்டுவிட்டது என்ற இதே பதிலைத்தான் தந்தனர். அப்போது நான் இறைவன் என்பவன் நிஜமல்ல; மாறாக பழைய தத்துவ வாதமாகும் என்ற முடிவுக்கு வந்தேன். இல்லையென்றால் அவன் எப்படிப்பட்டவனாக இருக்க வேண்டுமென்றால், அவன் அனைத்து அழகிய பண்புகளின் உறைவிடமாக இருக்க வேண்டும். எந்த ஒரு பண்பும்





வீணாகியிருக்கக் கூடாது. முதலில் பேசிக் கொண்டிருந்தான்; இப்போது அவனது பேசும் பண்பின் மீது முத்திரை விழுந்து விட்டது என்பதை எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடியும்? நான் மிக விரைவில் நாத்திகவாதியாக மாறவிருந்தேன். அப்போது பின்புறமிருந்து ஒரு மெல்லிய கரம் எனது தோளைப் பிடித்து (தடுத்து நிறுத்தியவாறு) முஹம்மது இல்யாஸ்! என்ன விஷயம்? ஏன் சோகம் எனக் கேட்டது. அதற்கு நான் இறைவனது உண்மை நிலை தெரிந்து விட்டது. அவன் ஒரு கற்பனைக் கதையேயாவான். உண்மையில்லை. ஏனென்றால் நான் எவர்களிடமெல்லாம் கேட்கிறனோ அவர்களெல்லாம் இறைவன் முதலில் பேசிவந்தான்; இப்போது பேசுவதில்லை என்றே கூறுகின்றனர் என்றேன். அப்போது எனது கரத்தைப் பிடித்த அந்த மனிதர் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களாவார்கள். மேலும் அவர்கள் அந்த இறைவன் இப்போதும் பேசுகின்றான் என்பதை நான் உங்களுக்குத் தெரியப்படுத்துகின்றேன். வாருங்கள். நிபந்தனை என்னவென்றால் நீங்கள் எனது கையில் பைஅத் செய்ய வேண்டும். ஏனெனில் நான் இறைவன் புறமிருந்துள்ள மஸீஹ்ூம் மஹ்தியும் ஆவேன். அந்த இறைவன் உம்மீதும் இறங்கத் துவங்கி விடுவான். அவன் நாடினால் உம்முடனும் பேசுவான் என்று கூறினார்கள்''.

அப்துல் அலி அக்வந்ஸாதா சாஹிப் அவர்களே இப்போது நான் இறைவன் மீது ஆணை இடுகிறேன், அவன் மீது பொய்யாக ஆணையிடுவது சபிக்கப்பட்டவர்களின் செயலாகும். மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் இறைவன் என்னுடனும் பேசுகின்றான். நான் தங்களிடம் கேட்கிறேன். உங்களில் எவராவது இறைவன் தன்னுடன் பேசுகின்றான் என்று வாதிப்பவர் உள்ளாரா? அப்போது கூட்டத்தினர் அனைவர் மீதும் மவுனம் ஆட்கொண்டு சிறிது நேரம் அமைதி நிலவியது. எத்திசையிலிருந்தும் எந்த ஒரு பதிலும் வரவில்லை. அப்போது மௌலவி முஹம்மது இல்யாஸ் கான் சாஹிப் (ரலி) அவர்கள் கூறினார்கள்: சடங்கு சம்பிரதாயங்கள் மட்டுமே இஸ்லாம் என்றாகிவிட்ட, இவ்வாறான கொள்கைகளையும் பழுதடைந்த இஸ்லாத்தையும் வைத்து கொண்டு நான் என்ன செய்வேன்? அதில் அவன் பேசுவதுமில்லை, பிறகு நான் ஏன் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் இஸ்லாத்தை ஏற்கக் கூடாது? அது உண்மையான இஸ்லாமாகும். அதில் அன்பும்

நேசத்தையும் கொண்ட வார்த்தைகளுடன் உரையாடுகின்ற இறைவன் கிடைக்கின்றான்.'' (ஹயாத்தே இல்யாஸ் - எழுதியவர் அப்துஸ் ஸலாம்கான். பக்கம் - 118)

இது தான் அந்த உயிருள்ள இறைவனும் அன்னாரின் வாழ்க்கையின் ஈமான் ததும்பிய அனுபவமுமாகும். இதை அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியுள்ளது.

**உண்மையான இஸ்லாம்**

அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன? என்ற கேள்விக்கான மற்றுமொரு பதில் அஹ்மதிய்யத் உலகிற்கு உண்மையான இஸ்லாத்தை வழங்கியுள்ளது. அந்த இஸ்லாம் நமது எஜமானர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தூய இஸ்லாமாகும். திருக்குர்ஆன் நிலைத்திருக்கக் கூடிய அந்த உண்மையான தூதும் நேர்வழியின் மிகச் சிறந்த விளக்கமும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நடைமுறைகளிலும் நபிமொழிகளிலும் காணப்படுகிறது. உண்மை என்னவென்றால், மனிதனின் துக்கத்திற்கான மருத்துவம் மற்றும் முழு உலகின் பழுதை நீக்கும் ஒரு மருந்து உலகில் உள்ளதென்றால் அது இந்த இஸ்லாமேயாகும். அதன் போதனைகள் அரபு நாட்டில் காட்டுவாசிகளாக வாழ்ந்தவர்கள், இணைவைப்பவர்கள் மார்க்கமற்ற சமுதாயத்தினர் ஆகியோரிடத்தில் ஒரே வேளையில் எத்தகைய புரட்சியை ஏற்படுத்தியதென்றால் அவை அதற்குமுன் எந்த கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராதவையாகும். ஆம் அந்தப் புரட்சி நமது ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களால் இருள் நிறைந்த இரவுகளில் செய்த துஆக்களின் விளைவாகும். அது இருள், வழிகேடு எனும் எல்லா துருக்களையும் அப்புறப்படுத்தி விட்டது. பாவங்களில் இருள்களை துண்டித்து நற்செயல், நேர்வழி எனும் ஆன்மீக சூரியனை முழு உலகின் மீதும் பிரகாசிக்கச் செய்தது. இதுவே உண்மையான இஸ்லாமாகும். இன்றும் உலகிலுள்ள அனைத்து குறைபாடுகளின் மருத்துவம் இந்த இஸ்லாத்தில் மட்டுமே உள்ளது. இந்த உண்மை இஸ்லாத்தைத் தான் இக்காலத்தில் அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியுள்ளது. அஹ்மதிய்யத் உலகிற்கு ஒரு புதிய இஸ்லாத்தை வழங்கிவிடவில்லை. மாறாக, ஒவ்வொரு புதிய மற்றும் பிறரால் சுயமாக உருவாக்கப்படும் இஸ்லாத்தை அழிப்பதற்கும் ஹஸ்ரத்





நபிகள் நாயகம் (ஸல்) அவர்களால் கொண்டு வரப்பட்ட உண்மையான இஸ்லாத்தை மீண்டும் நிலை நிறுத்துவதற்குப் பெயர்தான் அஹ்மதிய்யத் ஆகும். அஹ்மதிய்யத் இவ்வுண்மை இஸ்லாத்தின் உயிருள்ள மற்றும் உயிர் வழங்கக் கூடிய தூதின் செயல் வடிவிலான முன்மாதிரியை உலகிற்கு காட்டியுள்ளது. இது எவ்வாறான ஒரு உண்மையென்றால் இதனை நம்மைச் சாராதவர்களும் ஆமோதித்துள்ளனர்.

இஸ்லாமிய உலகின் பிரசித்தபெற்ற சிந்தனையாளரும் கவிஞருமான அல்லாமா இக்பால் எழுதுகிறார்:-

In the Pubjab the essentially muslim type of character has found a powerful expression in the so-called Qadiani - sect;

(The Muslim community - A sociological study by Iqbal)

''பஞ்சாபில் இஸ்லாமிய செயல்பாட்டின் உயர் முன்மாதிரி காதியானி பிரிவு என்று அழைக்கப்படுகின்ற இந்த ஜமாஅத்தின் உருவில் வெளிப்பட்டு உள்ளது'' *(உர்து மொழியாக்கம் மௌலானா ஸஃபர் அலீகான். ஆதாரம் மில்லத்தே பைஸா பர் ஏக் உம்ரானி நஸர், முதல் வெளியீடு 1970, மற்றும் ஸலாம் ஆயினா அதப் சோக் மீனார், அனார்கலி லாஹூர் மற்றும் லாஹூரிலிருந்து வெளிவரும் ரப்தார் ஸமானா வார இதழ் 20, செப்டம்பர் 1949 - பக்கம் 18)*

பிரபல முற்போக்குச் சிந்தனையாளரும் இஸ்லாமிய வரலாற்றாசிரியரும் எழுத்தாளருமான அல்லாமா நியாஸ் ஃபதஹ் பூரி அவர்கள் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் தொடர்பாக எழுதுகின்றார்:

''அன்னார் நிச்சயமாக இஸ்லாத்தின் நல்லொழுக்கத்தை மீண்டும் உயிர்பெறச் செய்தார் என்பதில் எவ்வித வாதத்திற்கும் இடமில்லை. அவர் எவ்வாறான ஓர் ஜமாஅத்தை உருவாக்கிக் காண்பித்தார் என்றால் அவரது வாழ்க்கையை நாம் நிச்சயமாக நபியின் உயர் முன்மாதிரியின் நிழல் என்று கூறலாம்''. *(நியாஸ் ஃபதஹ் பூரி, தொகுப்பு முஹம்மது அஜ்மல் ஷாஹித் நாஸிர், ஜமாஅத்தே அஹ்மதிய்யா கராச்சி, பக்கம் 29, ஆதாரம் நிகார் பத்திரிக்கை, லக்னோ நவம்பர் - 1959.)*

### தூய்மையான இஸ்லாமிய சமூகம்

இன்று இஸ்லாமிய உலகம் பிரிவினைக்கு பலியாகிவிட்டது. அன்பு, சகோதரத்துவம் முஸ்லிம்களின் உள்ளங்களிலிருந்து மறைந்து விட்டது. முஸ்லிம் நாடுகளின் நகரங்கள் வெட்கக் கேடு மற்றும் தீய செயல்களின் தலைமையகமாக மாறிவிட்டன. அவர்கள் வாழும் ஊர்களும் தெருக்களும் இஸ்லாமிய நல்லொழுக்கங்களிலிருந்தும் வெறுமையாக காட்சியளிக்கின்றன. இஸ்லாமிய நாடுகளின் பத்திரிக்கைகளைப் பார்க்கும்போது உலகின் அனைத்து தீமைகளும் அந்த நாடுகளில் குடி அமர்ந்துள்ளதோ என எண்ணத் தோன்றுகிறது. இஸ்லாமிய போதனைகளும் நல்லொழுக்கத்தின் மதிப்புகளும் வெளியேறி விட்டன. இவ்வாறு இத்தீய செயல் நிறைந்த சமூகத்தை இஸ்லாம் எனச் சுட்டிக்காட்டுவது இஸ்லாமிய மார்க்கத்தை கடுமையாக இழிவு படுத்துவதாகும். இந்நிலையைக் கண்டதும் கீழ்க்காணும் கவிதை தான் நினைவுக்கு வருகிறது!

‘‘அந்தோ பரிதாபம்! வீணானதைப் பின்பற்றிய கூட்டமும் அக்கூட்டத்தினரின் உள்ளத்திலுள்ள தீய உணர்வும் பெருகிக் கொண்டே செல்கிறதே.’’

இந்த சமுதாய மக்கள் அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன? என்ற கேள்வியை எழுப்புகின்றனர். அவர்களுக்கு எங்களது பதில்களில் ஒன்று, அஹ்மதிய்யத் மரணக்குழியில் நின்று கொண்டிருந்த உலகிற்கு உண்மை மற்றும் அமைதியின் வழியைக் காண்பித்தது. அஹ்மதிய்யத் உலகிற்கு ஓர் உண்மையான தூய இஸ்லாமிய சமூகத்தை வழங்கியுள்ளது. அவை சரியான இஸ்லாமிய போதனைகள் மற்றும் கண்ணியத்தின் மீது நிலை கொண்டுள்ளது. மேலும் எவருக்கேனும் அகப்பார்வை இருக்குமென்றால் அவர் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு ஊரிலும் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்திற்குள் இக்காட்சியைக் காணலாம். அங்கு அல்லாஹ் மற்றும் அவனது ரஸூல் (ஸல்) அவர்களின் நேசத்தைப் பற்றிய பேச்சுகள் நடந்து கொண்டிருக்கும். அங்கு இரவும் பகலும் இறைவணக்கத்தில் கழிந்து கொண்டிருக்கும். அங்கு இஸ்லாமிய போதனை வகுப்புகளுக்கான முறையான அமைப்புகள் உள்ளன. அங்கு ஒழுக்கப் பயிற்சி மற்றும் ஒழுக்கங்களை சீர்படுத்துவதற்காக இரவு பகலாக எல்லையற்ற ஒரு முயற்சி நடக்கின்றது. அங்கு





நல்லவர்களுடன் நேசத்தையும் தீயவர்களுடன் வெறுப்பையும் காணமுடியும். அங்கு நன்மைகளில் ஒருவரையொருவர் முந்திக் கொள்ளும் காட்சியைக் காணமுடியும். கண்ணியமிக்க ஆரம்ப காலத்து பொருளை காணிக்கையாக முன்வைக்கின்றனர். எதைப் பற்றியெல்லாம் நான் எடுத்துக் கூறுவேன்!

இது எவ்வாறான உயிருள்ள, உயிரளிக்கக் கூடிய சமூகமென்றால் அல்லாஹ்வின் கிருபையால் அஹ்மதிய்யத்தின் அருளால் இது உலகில் நிலைநாட்டப்பட்டு விட்டது. இதன் சுற்றளவு பரந்து விரிந்து கொண்டே செல்கிறது. அஹ்மதிய்யத் இந்த ஆகரீன் காலகட்டத்தில் வழங்கியுள்ள இஸ்லாமிய சமுதாயமாகிய இது உண்மையில் துவக்கமேயாகும். இந்த உலகளாவிய ஆன்மீக புரட்சியின் அருளால் உலகம் இந்நூற்றாண்டில் இறைவன் நாடினால் ஓர் ஆன்மீக வளர்ச்சியை காணும். அது புதிய வானமும், புதிய பூமியுமாக இருக்கும். மேலும் முழு உலகமும் இஸ்லாமிய சூரியனால் பிரகாசிக்கும். இன்று முழு உலகிற்கும் அஹ்மதிய்யத்தின் தூது என்னவென்றால்:

‘‘மக்களே! வாருங்கள், இறைவனது ஒளியை இங்குதான் பெறுவீர்கள். உங்களுக்கு அமைதிக்கான வழியையும் நாங்கள் கூறிவிட்டோம். பெற்றுக் கொள்ளுங்கள்.’’

### தூய மாறுதல்கள்

ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் தோற்றம் விலையுயர்ந்த கல்லைப் போன்று அளவற்ற அருளைக் கொண்ட தோற்றமாகும். எவர் ஒருவர் இவருடன் உண்மையான தொடர்பை ஏற்படுத்துவாரோ அவரது உலகம் மாறிவிடும். மண் கார்த்திகை நட்சத்திரத்திற்கு சமமானதாக மாறிவிடும். அவரது முந்தைய வாழ்வின் மீது ஒருவித மரணம் வந்து விடுகிறது. ஒரு புதிய ஆன்மீக வாழ்வை அவர் பெறுவார். பாவத்தின் அசுத்தத்திலிருந்து தூய்மையாகி நன்மையின் உருவாக மாறிவிடுவார். எவர்கள் நன்மையின் ஆரம்பக்கட்டத்தில் உள்ளனரோ அவர்கள் இறைநெருக்கம் பெறும் வழியில் எந்த அளவுக்கு முந்திச் செல்வார்கள் ஓட்டம் பிடிப்பார்கள் என்றால் பார்த்து கொண்டிருக்கும்போதே உயர்வான ஆன்மீக தகுதிகளை அடைந்து விடுவார்கள். உலகத்திற்கு அஹ்மதிய்யத்

வழங்கியிருக்கின்ற ஆன்மீகத்தின் இந்த தூயப் புரட்சி இன்றும் தொடர்கின்றது.

ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் கூறுகின்றார்கள்:

''எனது கையில் பைஅத் செய்கின்ற ஆயிரக் கணக்கானவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்றால் முன்பு அவர்களின் செயல்நிலை மோசமானதாக இருந்தது. பிறகு பைஅத் செய்த பின்பு அவர்களின் செயல்நிலை சீராகிவிட்டதை நான் பார்க்கின்றேன். விதவிதமான தீமைகளிலிருந்து அவர்கள் தவ்பா செய்து, தொழுகையை விடாமல் மேற்கொள்கின்றனர். மேலும் நான் எனது ஜமாஅத்தில் நூற்றுக்கணக்கானவர்களை எந்தநிலையில் பார்க்கின்றேன் என்றால் அவர்கள் தமது உள்ளங்களில், எப்படியாவது மன இச்சைகளைப் பின்பற்றுவதிலிருந்து தூய்மையாகிவிடவேண்டும் என்ற வேதனையை உள்ளடக்கியவர்களாக காணப்படுகின்றனர்.'' *(ரூஹானிகஸாயின். இலண்டன் வெளியீடு 1984, பாகம் - 22- ஹக்கீகத்துல் வஹி பக்கம் - 86, அடிக்குறிப்பு)*

இந்தியாவின் ஒரு பிரபல மார்க்க அறிஞர் மௌலவி ஹஸன் அலி (ரலி) அவர்கள் 1894இல் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் ஜமாஅத்தில் இணைந்தார்கள். மார்க்கத் தொண்டின் காரணமாக இந்தியாவில் அவர்களுக்கு அதிக மதிப்பிருந்தது. அவர்களிடம் தாங்கள் பைஅத் செய்து என்ன கிடைத்துள்ளது எனக் கேட்டார். அதற்கு அவர்கள் கூறினார்கள்:-

''நான் உயிரற்றவனாக இருந்தேன். தற்போது உயிர் பெற்று நடக்கின்றேன். பாவங்களை பகிரங்கப்படுத்துவது நல்லதல்ல... இப்போது எனது உள்ளத்திலுள்ள திருக்குர்ஆன் மற்றும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீதுள்ள கண்ணியம் முன்பு இல்லாதிருந்தது. இவையனைத்தும் ஹஸ்ரத் மிர்ஸா சாஹிப் (அலை) அவர்களின் மூலமாகக் கிடைத்தவையாகும்''. *(தாயீதே ஹக், எழுதியவர் மௌலவி ஹஸன் அலி சாஹிப்-மூன்றாம் பதிப்பு 23, டிசம்பர் 1932, அல்லா பக்ஸ் ஸ்டீம் பிரஸ் காதியான் பக்கம் - 79.)*

''ஹஸ்ரத் மௌலான குலாம் ரசூல் ராஜிகி (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்! ஒருமுறை தாசில்தார் நவாப்கான் சாஹிப் ஹஸ்ரத்





மௌலானா நூருத்தீன் (ரலி) அவர்களிடம், மௌலானா! முன்பிருந்தே தாங்கள் உன்னத மனிதராக இருக்கின்றீர்கள். தங்களுக்கு ஹஸ்ரத் மிர்ஸா சாஹிப் (அலை) அவர்களிடம் பைஅத் செய்ததனால் அதிகப்படியாக என்ன பலன் கிடைத்துள்ளது? எனக் கேட்டார். இதற்கு ஹஸ்ரத் மௌலானா சாஹிப் (ரலி) அவர்கள் கூறினார்கள்:-

''நவாப்கான்! எனக்கு ஹஸ்ரத் மிர்ஸா சாஹிப் (அலை) அவர்களின் பைஅத்தினால் எவ்வளவோ நன்மைகள் கிடைத்துள்ளன. அவற்றில் ஒரு நன்மை, முன்பெல்லாம் எனக்கு ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தரிசனம் கனவின் மூலமாகத்தான் கிடைத்தது. இப்போதோ விழித்திருக்கும் வேளையிலும் கிடைக்கிறது''. *(ஹயாத்தே நூர் எழுதியவர் ஷேக் அப்துல் காதிர். - பக்கம் 194)*

அஹ்மதிய்யத்தின் வரலாற்றில் இவ்வாறான முன் மாதிரிகள் எத்தனையோ உள்ளன. அஹ்மதிய்யத் புதிதாக இணைபவர்களின் வாழ்வில் ஒரு மாபெரும் ஆன்மீக புரட்சியை உருவாக்கி அவர்களை பாவத்தின் அசுத்தத்திலிருந்து தூய்மையாக்கி, இஸ்லாமிய போதனைகளின்படி உண்மையாக செயலாற்றுபவர்களாக்கி விட்டது. இவர்களில் சிலர் அஹ்மதிய்யத்தில் இணைவதற்கு முன்பு ஊர்களில் பயங்கர கொள்ளையர்களாக இருந்தனர். அஹ்மதிய்யத் அவர்களை இறைவனை வெளிப்படுத்துபவர்களாக மாற்றிவிட்டது. இவர்களில் இன்னும் சிலருக்கு லஞ்சம் வாங்குவது அன்றாட வேலையாக இருந்தது. அஹ்மதியான பின்பு ரூபாய் நோட்டுகளின் மூட்டைகளை முதுகில் சுமந்து சென்று எவர்களெல்லாம் என்னிடம் லஞ்சம் கொடுத்தீர்களோ அவர்கள் தமது பணத்தை திரும்பப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று ஊர்ஊராக சென்று அறிவித்தனர். ஒவ்வொரு மாலையிலும் உறங்குவதற்கு முன்பு ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை ஏசிப் பேசிய கிறிஸ்தவர்கள், அஹ்மதியான பின்பு நறுமணத்தால் வாயை தூய்மையாக்கி சலவாத் ஸலாம் ஓதிய பின் படுக்கைக்குச் செல்கின்றனர்.

இங்கிலாந்தைச் சேர்ந்த பஷீர் ஆர்ச்சார்டு சாஹிப் கிறிஸ்துவத்திலிருந்து விலகி 1944 இல் அஹ்மதி முஸ்லிமானார். சூதாட்டம், குடிப்பழக்கம் போன்றவற்றிலிருந்து விலகி பிறருக்கு துஆ செய்யும் மாமனிதராக உருவெடுக்கும் அளவுக்கும் இஸ்லாமிய

போதனையை பின்பற்றத் துவங்கினார். வஸிய்யத் (உயில்) திட்டத்தில் இணைந்து மூன்றில் ஒரு பாகத்தை வஸிய்யத் செய்தும் தனது வாழ்வை இறைவழியில் அர்ப்பணம் செய்தார். முதல் ஆங்கில கொள்கைபரப்புநராக நீண்ட காலம் நிறைவுடன் சேவை செய்யும் வாய்ப்பையும் பெற்றார். ஸீராலியோனைச் சேர்ந்த அலிரோகேர்ஸ் அவர்கள் வாலிபப்பருவத்தில் அஹ்மதிய்யத்தை ஏற்றுக் கொண்டார். அப்போது அவருக்கு 12 மனைவிகள் இருந்தனர். இஸ்லாமிய போதனை வழங்கியுள்ள அனுமதிக்கு ஏற்ப 4 மனைவிகளை மட்டும் தன்னுடன் வைத்துக் கொண்டு மற்றவர்களுக்கு விடை கொடுத்து விட்டார். ***(அன்ஸாருல்லாஹ் மாத இதழ், மார்ச் 1984, பக்கம் 30, 31)***

அமெரிக்காவின் ஒரு பிரபல பாடகருக்கு அஹ்மதிய்யத்தை ஒப்புக் கொள்ளும் வாய்ப்பு கிடைத்தது. பின்பு பாடும் பழக்கம் முற்றிலும் குறைந்து விட்டது. தனது அனைத்து ஈடுபாடுகளையும் பாடலின் மூலம் கிடைத்துக் கொண்டிருந்த பெரும் வருமானத்தையும் பொருட்படுத்தாமல் இறையடியார்களின் எளிமையான வாழ்வை மேற்கொண்டவாறு நடு இரவுத் தொழுகையை வழக்கப்படுத்திக் கொண்டார். ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பெயரைக் கேட்டதும் கண்ணீர் வழிய ஆரம்பித்துவிடும் அளவுக்கு அன்னாரின் நேசராக மாறிவிட்டார். (காலித் மாத இதழ் ரப்வா - ஜனவரி, 1988, பக்கம் 40, ஹஸ்ரத் நான்காவது கலீஃபதுல் மஸீஹ் அவர்களின் ஜுமுஆ பேருரை 16 அக்டோபர் 1987)

நல்ல தூய மாற்றங்களின் இச்சம்பவங்கள் புராணக்கதைகளல்ல, உண்மையாகும். இவ்வாறான அற்புதங்களினாலும் ஈமானை வலுவூட்டும் உண்மைகளினாலும் அஹ்மதிய்யத்தின் மடி நிறைந்துள்ளது. இந்த அற்புதங்கள் ஆங்காங்கே காணக்கிடைக்கும் என்பதற்கு உலகின் ஒவ்வொரு மூலை முடுக்கும் சாட்சி பகர்கின்றன. ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் கூறுகின்றார்கள்:-

''எனது ஜமாஅத் நற்செயலையும் நல்ல தகுதிகளையும் வளர்த்துக் கொள்வதில் எந்தளவுக்கு முன்னேற்றம் கண்டுள்ளதென்றால் இதுவும் ஓர் அற்புதமேயாகும்''. ***(ஸீரதுல் மஹ்தி காதியான் வெளியீடு 1935, பாகம் - 1, பக்கம் 165)***





இந்தியாவின் ஒரு பத்திரிகை இந்த உண்மையை இவ்வாறு ஆமோதிக்கின்றது:-

''காதியான் எனும் தூய நகரில் ஓர் இந்திய தூதர் பிறந்துள்ளார், அவர் தன்னைச் சார்ந்தவர்களை நற்செயல் உயர் நல்லொழுக்கத்தால் நிரப்பிவிட்டார். இந்த நற்பண்புகள் அவரைப் பின்பற்றுகின்ற இலட்சக்கணக்கானோரின் வாழ்விலும் பிரதிபலிக்கின்றன. ***(ஸ்டேட்ஸ் மேன், தில்லி, 12-பிப்ரவரி - 1949, தஹ்ரீக் அஹ்மதிய்யத் எழுதியவர் - பரகாத் அஹ்மது சாஹிப் ராஜிகி - காதியான் வெளியீடு 1958, பக்கம் - 3)***

இலட்சங்களின் காலம் என்றோ கடந்து இப்போது கோடிகளின் காலம் வந்துவிட்டது. பில்லியன்களின் காலமும் தொலைவில் இல்லை என்பதை நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். உலகளாவிய இந்த ஆன்மீகப் புரட்சிமிக்க வாழ்வு அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியுள்ள நம்பிக்கையின் தூதுச் செய்தியாகும். ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் எவ்வளவு அருமையான உண்மையை கூறியுள்ளார்கள்:-

''இந்த மரத்தை அதன் கனிகளிலிருந்து இந்த நட்சத்திரத்தை அதன் ஒளியிலிருந்தும் அறிந்துக் கொள்வீர்கள்.'' ***(ரூஹானி கஸாயின் இலண்டன் வெளியீடு, 1984, பாகம் 3, ஃபத்ஹே இஸ்லாம், பக்கம் -44)***

## அஹ்மதிய்யா கிலாஃபத்தின் அருட்கொடை

அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் உலகிற்கு உண்மையான இஸ்லாத்தை மட்டும் வழங்கவில்லை மாறாக, ஆன்மீக வழிகாட்டலுக்கான ஒரு அமைப்பையும் வழங்கியுள்ளது. இது இஸ்லாமிய சொல் வழக்கில் 'கிலாஃபத்' என்றழைக்கப்படுகிறது. இது தொடர்பாக அல்லாஹ் தனது மூஃமின் அடியார்களிடம் நற்செயல்கள் தொடரும் பட்சத்தில் இந்த அருட்கொடைகள் உங்களுக்கு கிடைத்துக் கொண்டிருக்கும் என்ற நிபந்தனையுடன் வாக்குறுதி அளித்துள்ள அருள் நிறைந்த அமைப்பாகும். முந்தைய நல்லடியார்களுக்கு மத்தியில் இந்த அருட்கொடையை கிலாஃபதே ராஷிதா என்ற உருவில் வழங்கினான். பிற்காலத்தில் அது வெறும் ஆட்சியாக மட்டும் மாறி இறுதியில் முழுவதும் முடிந்து விட்டது. இந்த அருட்கொடையிலிருந்து பாக்கியமிழந்த முஸ்லிம்கள் செயல்

ரீதியாகவும் இதர அனைத்து விஷயங்களிலும் இழிவின் படுகுழியில் வீழ்ந்து விட்டனர். அனைத்திலும் இவர்களுக்கு தோல்வியுமே எழுதப்பட்டு விட்டது.

அல்லாஹ் இஸ்லாத்தை உயிர்ப்பிப்பதற்காக ஹஸ்ரத் இமாம் மஹ்தி (அலை) அவர்களை உம்மத்தி நபியாக தேர்ந்தெடுத்து தோற்றுவித்தான். பின்புநுபுவ்வத்தைப் பின் தொடர்ந்து கிலாஃபத் ஏற்படாத எந்த ஒரு நுபுவ்வத்தும் இருந்ததில்லை *(கன்ஸுல் உம்மால் அல்லாமா அலாவுத்தீன் அலீ, பாகம் 11, பக்கம் 115 ஹதீஸ் எண். 31444, அத்தப அதல் ஊலா தாருல் குத்புல் இல்மிய்யா, பேருத். லெபனான் - 1998)* என்ற தன் வாக்குறுதிக்கேற்ப அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தில் கிலாஃபத் அமைப்பை அல்லாஹ் ஏற்படுத்தினான். எவர்கள் இந்த இறைவனது அருட்கொடையிலிருந்து முகந்திருப்பிக் கொண்டனரோ அவர்கள் வழிகேட்டிலும் இருளிலும் சுற்றித் தடுமாறுகின்றனர். இன்றும் துரதிஷ்டமும் இழப்பும் அவர்களுடன் கைகோர்த்துக் கொண்டுள்ளது. ஆனால் எவர்கள் கிலாஃபத்தின் ஒளியால் தனது உள்ளங்களை ஒளிமயமாக்கிக் கொண்டார்களோ அவர்கள் இந்த கிலாஃபத் எனும் விளக்கின் மீது விட்டில் பூச்சிகளைப் போன்று தன்னை மாய்த்துக் கொண்டனர். காலத்தின் கலீஃபாவின் ஒவ்வொரு அழைப்புக்கும் நாங்கள் ஆஜரானோம் எனக் கூறியவாறு உயிர், பொருள், கண்ணியம், மதிப்பு ஆகியவற்றை காணிக்கையாக முன்வைப்பதை தனது பாக்கியமாக அவர்கள் கருதுகின்றனர். இவர்களின் மீது எவ்வாறான அருள்மழை அசாதாரணமாக பொழிகிறது எனப் பாருங்கள், கேளுங்கள்.

கிலாஃபத் அமைப்பின் அருட்கொடையால் அஹ்மதிய்யா ஜமாஅத்திற்கு நன்மையின் ஒவ்வொரு களத்திலும் முன்னேற்றமும் பலமும் கிடைத்துள்ளது. அச்சத்தின் அனைத்து நிலையும் அமைதியாக மாறி இன்று முழு உலகிலும் இந்த ஒரே ஜமாஅத் மட்டுமே கிலாஃபத் எனும் அருட்கொடையால் பயனடைந்து கொண்டிருக்கிறது. எதிரிகளின் ஒவ்வொரு இயக்கமும் கிலாஃபத் எனும் பாறையுடன் மோதி தூள் தூளாகிவிட்டது என்பதற்கு ஜமாஅத்தின் வரலாறு சாட்சியாகும். லாஹூர் பார்ட்டிகளின் குழப்பமாயினும் சரி அல்லது அஹ்ராரி இயக்கத்தின் குழப்பமாயினும் சரி, 1953ஆம் ஆண்டில் நடைபெற்ற நாடு தழுவிய





கலவரமாகட்டும் அல்லது 1974-ம் ஆண்டின் பயங்கரமான குழப்பங்களாகட்டும், அல்லது 1984-ம் ஆண்டிற்குப் பின்னுள்ள உள்ளத்தை இரணமாக்கும் சம்பவங்களாகட்டும் இவற்றின் விளைவாக பாகிஸ்தானிய மண் ஆங்காங்கே அப்பாவி அஹ்மதிகளின் இரத்தத்தினால் நிறம் மாறி காட்சியளித்த போது காலத்தின் கலீஃபாவின் உறுதி மிக்க வழிகாட்டல் மற்றும் அறிவுரையினால் ஜமாஅத் ஒவ்வொரு சோதனையான காலகட்டத்திலும் முஃமின்களுக்கே உரித்தான கம்பீரத்துடன் மேலும் மேலும் முன்னேறிச் சென்றது. கிலாஃபத்தின் அருட்கொடையால் ஜமாஅத் வெற்றிகளின் சிகரங்களை எளிதாக கடந்து சென்றது. அவர்களது அர்ப்பணம், தியாகம் அளவு கடந்த அன்பு மற்றும் பற்றின் அளவு உயர்ந்து கொண்டே சென்றது. கஷ்டங்கள் எனும் நெருப்பு ஜுவாலையிலும் அவர்களின் புன்சிரிப்பை பறிக்க முடியவல்லை. அஹ்மதிகளின் கையில் திருவோட்டை ஏந்தச் செய்வேன் என்று கூறியவர் தூக்கில் தொங்கியவாறு காணப்பட்டார். காதியானிய்யத் எனும் புற்றுநோயை அழித்த பிறகே நிம்மதிப் பெருமூச்சுவிடுவேன் என்று சூளுரைத்தவர் இதே உலகின் நரக நெருப்பில் உடலின் எந்தப் பகுதியும் எஞ்சாதவாறு சாம்பலாகிவிட்டார். கிலாஃபத்தின் இந்த அருட்கொடை இறைவனால் வழங்கப்பட்டதாகும். இந்த அமைப்பு மனிதனின் திட்டத்தால் ஆனதல்ல. மாறாக இறைவனின் கரங்களால் நிறுவப்படுவதாகும். இந்த அமைப்பு ஒன்று பட்ட உம்மத்தின் உயிராகும். இது அணி வகுப்பின் அடித்தளமாகும். இது வெற்றியின் திறவு கோலாகும். இது முஃமின்களின் ஈமான் மற்றும் உறுதியின் அடையாளமாகும். இந்த கிலாஃபத் அமைப்பின் மூலமே இஸ்லாத்திற்கு புத்துயிர் கிடைக்க உள்ளது. இது எவ்வாறான அருள் நிறைந்த வானத்தின் அமைப்பு என்றால் இது நிலைநாட்டப்படுவது பற்றி ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவ்வாறு நற்செய்தி கூறியுள்ளார்கள்.

**ஸும்ம தகூனு கிலாஃபத்துன் அலா மின்ஹாஜின்னுபுவ்வத்**

அதாவது, பின்பு நுபுவ்வத் வழியிலான கிலாஃபத் ஏற்படும் *(முஸ்னத் அஹ்மது பின் ஹம்பல் பாகம்-4, பக்கம்-273, அல் அல்மக்துபுல் இஸ்லாமிய்ய லித்தபா அத்தி வன்னிஷ்ர், பேருத்)*

இறைவன் கிலாஃபத் எனும் அருட்கொடையை எங்களுக்கு வழங்கும் அளவுக்கு அவனுக்கு எங்களின் மீது அன்பு இருக்கிறது. 72 பிரிவினர்களுக்கு மத்தியில் இந்த ஒரே ஜமாஅத் மட்டுமே அல்லாஹ்வின் பார்வையில் இந்த அருட்கொடைக்கு தகுதியானவர்களும் ஸிராதுல் முஸ்தகீம் எனும் நேர்வழியில் நிலைத்திருப்பவர்களுமாவார்கள் என்பதற்கு இது ஒரு சான்றாகும். பாதுகாப்பு வழங்கும் கோட்டையை தேடும் மக்களே! அமைதியை தேடிக் கொண்டிருப்பவர்களே! உண்மையிலேயே நீங்கள் அமைதி மற்றும் நிம்மதியின் வழிகளை தேடிக் கொண்டிருப்பவர்களாயின் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் கிலாஃபத் அமைப்பின் அமைதியை வழங்கும் நிழலின் கீழ் வாருங்கள். இன்று இந்த நிழலைத் தவிர உண்மையான அமைதி, நிம்மதி, மற்றும் உண்மையான வாழ்வை வழங்கக் கூடிய வேறு எந்த நிழலும் உங்களுக்கு இல்லை. இந்த ஒரே ஆன்மீக அமைப்பின் பக்கம் வாருங்கள் என்ற இம்மாபெரும் தூது செய்தியை இந்த கிலாஃபத் அமைப்பின் மூலமாக அல்லாஹ் முழு உலகிற்கும் விடுக்கின்றான். மேலும் நினைவில் கொள்ளுங்கள். கிலாஃபத் இல்லையேல் உங்களுக்கு விதிக்கப்பட்ருப்பது வழி கேடும், துர்பாக்கியமும் தோல்வியுமே அன்றி வேறில்லை. காலத்தின் இமாமின் அழைப்புக்கு செவிகொடுங்கள், அவர்கள் கூறுகிறார்கள்:-

''சமுதாய மக்களே! இங்கே வாருங்கள். சூரியன் உதித்துவிட்டது. இருளின் பிடியில் இரவும் பகலும் ஏன் அமர்ந்திருக்கின்றீர்கள். உண்மையுடன் என் பக்கம் வாருங்கள்; அதில்தான் நன்மையிருக்கின்றது. அனைத்து திசைகளிலும் கொடிய மிருகங்கள் உள்ளன. நானே நிம்மதியின் புகலிடமாவேன்''.

## ஜமாஅத் அமைப்பு

நமது எஜமானர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. இறுதி காலத்தில் முஸ்லிம்கள் 73 கூட்டமாக பிரிந்து விடும் போது அவற்றில் நேரான வழியில் நிலைத்து நிற்கும் அந்த நற்பேறு பெற்ற கூட்டத்தினரை நாங்கள் எவ்வாறு அடையாளம் காணமுடியும்? என்ற இந்த கடினமாக கேள்விக்கான பதிலை ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இரண்டே வார்த்தையில் கூறினார்கள். வஹியல் ஜமாஅத் (அது ஜமாஅத் ஆகும்)

*(முஸ்னத் அஹ்மத் பின் ஹன்பல், பாகம் 4, பக்கம் 102, பேருத்*





*வெளியீடு, ஸுனன் இப்னிமாஜா, கிதாபுல் ஃபிதன் பாகம் இஃப்திராகுல் உமம்தாருல் குதுபுல் இல்மியா பேருத்.)*

அதாவது நன்றாக செவியை திறந்து கேளுங்கள். அந்த ஈடேற்றம் பெறும் கூட்டத்தாரின் அடையாளமானது அது ஒரு ஜமாஅத் எனும் அமைப்பாகும். பெயரும் ஜமாஅத் (கூட்டு) ஆக இருக்கும்; செயலும் ஜமாஅத் (கூட்டு) ஆக இருக்கும். ஜமாஅத் என்ற சொல்லில் உள்ள சிறப்பம்சம் அதில் இருக்கும். இந்த ஒரு வார்த்தை ஒருங்கிணைந்த ஒன்றுபட்ட கூட்டத்தைச் சுட்டிக் காட்டுகிறது. அதற்கு கட்டாயமாக கட்டுப்படத் தகுந்த ஓர் இமாமும் இருத்தல் வேண்டும். மேலும் ஜமாஅத்தின் ஒவ்வொருவருக்கும் அமைப்போடு முழுமையான தொடர்பு இருத்தல் வேண்டும். இன்று இவ்வாறான சிறப்பம்சங்களைக் கொண்ட ஒரு கூட்டம் இருக்கின்றதென்றால் அது அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் மட்டுமேயாகும். இதே தோற்றத்தையுடைய ஒருங்கிணைந்த அமைப்பைக் கொண்ட ஜமாஅத்தையே அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத், முஸ்லிம்கள் சிதறுண்டு போன இக்காலத்தில் வழங்கியுள்ளது.

அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்திற்கு அல்லாஹ் தனது அருளால் கிலாஃபத் அமைப்பை வழங்கியுள்ளான். அது நுபுவ்வத் வழியிலான கிலாஃபத் ஆகும். கலீஃபாவை இறைவன் தேர்ந்தெடுக்கின்றான். அவர் ஜமாஅத்தின் ஆன்மீக அமைப்பின் தலைவரும் ஜமாஅத்தின் இதயமும் ஆவார். காலத்தின் கலீஃபா இறைவனுக்கு பதில் சொல்லக் கூடியவராகவும் (ஜமாஅத்தின்) ஒவ்வொருவரும் கலீஃபாவிற்கு பதில் சொல்லக் கூடியவருமாவார். அஹ்மதிய்யா ஜமாஅத்தில் கிலாஃபத் அமைப்பின் கீழ் உறுதியான சக்தி வாய்ந்த விரிவான ஜமாஅத் அமைப்பு நிறுவப்பட்டுள்ளது. அது அனைத்து விதத்திலும் தன்னிகரற்றதாகும்.

ஸதர் அன்ஜுமன் அஹ்மதிய்யா என்பது ஜமாஅத்தின் தலைமையக அமைப்பாகும். பல்வேறு துறைகளுக்கு செயலகங்கள் நிறுவப்பட்டுள்ளது. பாகிஸ்தானிற்கு வெளியே உள்ள நாடுகளில் இஸ்லாத்தை பிரசாரம் செய்வதற்கும் பரப்புவதற்கும் தஹ்ரீகே ஜதீத் எனும் விரிவான அமைப்பு செயல்படுகிறது. கிராமங்கள் மற்றும் ஊர்களில் பிரத்தியேக பிரச்சாரம் மற்றும் சீர்திருத்த பணிகளுக்காக வக்ஃபே ஜதீத் எனும் அமைப்பு உள்ளது. இப்போது இது

வெளிநாடுகள் வரை விரிவடைந்துள்ளது. மார்க்க, சட்ட விஷயங்களில் வழிகாட்டுவதற்காக தாருல் இஃப்தா என்ற அமைப்பும் குழப்பங்களை முடிவுக்கு கொண்டு வர தாருல் கஸா எனும் அமைப்பும் உள்ளன. கிலாஃபத் அமைப்பிற்கு அடுத்தபடியாக மிக முக்கியத்துவம் வாய்ந்த ஆலோசனைக் கமிட்டி மஜ்லிஸே முஷாவரத் எனும் பெயரில் முழுஉலகிலும் நிறுவப்பட்டுள்ளது. முன்னேற்றம்அடைந்த நாடுகளில் மார்க்க, மருத்துவத்துறைகளின் சேவைக்காக நுஸ்ரத் ஜஹான் எனும் திட்டம் உள்ளது. பொருளாதாரத்தை கண்காணிக்க பைதுல் மால் எனும் அமைப்பு ஒவ்வொரு பகுதியிலும் வலுவாகவும் உறுதியாகவும் நிறுவப்பட்டுள்ளது. ஜமாஅத்திற்குள் ஆண், பெண்களின் மார்க்க அறிவு மற்றும் சீர்த்திருத்தத்தை கவனிக்கவும் வளர்ச்சியடைய வைக்கவும் அன்ஸாருல்லாஹ், குத்தாமுல் அஹ்மதிய்யா, அத்ஃபாலுல் அஹ்மதிய்யா, லஜ்னா இமாயில்லாஹ், நாஸிராத்துல் அஹ்மதிய்யா போன்ற தனித்தனியான கிளை அமைப்புகள் உள்ளன. அவை காலத்தின் கலீஃபாவின் நேரடிப் பார்வையின் கீழ் பணியாற்றுகின்றன.

இவை இந்த உறுதியான ஜமாஅத் அமைப்பிற்குள் இயங்கும் அமைப்புகள் பற்றிய சுருக்கமாகும். அவை தத்தமது வட்டத்திற்குள் பலவித மார்க்க கல்வி, சீர்திருத்தப் பணி, இதர வெளியீடு மற்றும் பொதுச் சேவைகளை செயலாற்றிக் கொண்டிருக்கின்றன. இது பிளவுராத முடிவற்ற தொடராகும். அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தில் நிலை நாட்டப்பட்டுள்ள இந்த மாபெரும் அமைப்பானது ஒரு முழுமையான செயல்பாட்டையும் சீர்த்திருத்ததையும் கொண்ட ஆன்மீக அமைப்பாகும். இவை நேரான அஹ்மதிய்யா கிலாஃபத்தின் மூலமாக உலகிற்கு கிடைத்துள்ளது. இதற்கு இணையானதை இஸ்லாமிய நாடுகளில் மட்டுமல்ல முழு உலகில் எங்கும் காண இயலாது. இந்த அமைப்பு தன்னைப் பொருத்தவரை அஹ்மதிய்யத்தின் உண்மைக்கு ஓர் உயிருள்ள அடையாளமாகவும் உலகளாவிய அசாதாரணமான முன்னேற்றங்களின் உயிராகவும் விளங்குகிறது.

## கொள்கை முரண்பாடுகளுக்கு சரியான தீர்ப்பு

நபிமொழியில் வருகின்ற ஹகமன் அத்லன் (நியாயத் தீர்ப்பு வழங்குபவர்) என்ற சொல்லிற்கேற்ப ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட





மஸீஹ் (அலை) அவர்கள் முஸ்லிம்களுக்கிடையேயான முரண்பாடான கொள்கைகளுக்கு அல்லாஹ்வின் புறமிருந்து அறிவைப் பெற்று சரியான இஸ்லாமிய கொள்கையின் ஞானத்தை வழங்கினார்கள். தவறுகளை சுட்டிக்காட்டி பல்வேறு விஷயங்களில் அவர்களின் தவறுகளை சீர்திருத்தினார்கள். மேலும் அறிவுப்பூர்வமாகவும் ஆதாரப்பூர்வமாகவும் இதுவே உண்மையான இஸ்லாமியக் கொள்கைகள் என நிரூபித்துக் காட்டினார்கள். கொள்கைகளை சீர்திருத்தும் களத்தில் ஜமாஅத் உலகிற்கு வழங்கியுள்ள அருள்கள் பற்றிய விபரம் நீண்டதாகும். இருப்பினும் ஒரு சிலவற்றைப் பற்றி மட்டும் கோடிட்டு காட்டுகிறேன்.

## ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்களின் மரணம்

முஸ்லிம்களிடமுள்ள அதிபயங்கரமான அடிப்படையற்ற ஒரு கொள்கை, ஹஸ்ரத் ஈஸா(அலை) அவர்கள் மரணமடையவில்லை; மாறாக, இன்றும் வானத்தில் உயிருடன் இருக்கிறார்கள். அவர்களே இறுதி காலத்தில் வானத்திலிருந்து வருகை தந்து முஹம்மதிய்ய சமுதாயத்தை மோசமான அழிவிலிருந்து காப்பாற்றி ஈடேற்றத்தின் வழிகோலாக அமைவார்கள் என்பதாகும்.

இக்கொள்கை ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உயர் கண்ணியத்துடன் மோதுவதாகவும் கடுமையாக இழிவுபடுத்துவதாகவும் இருக்கிறது என்பது வெளிப்படை. ஏனெனில் இதன்மூலம் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இக்கட்டான சூழ்நிலையில் மாட்டியுள்ளார்கள் என்பதே பொருள். ஷஅப் அபிதாலிபின் சம்பவமாகட்டும். அல்லது மதீனா ஹிஜ்ரத் சம்பவமாகட்டும். தாயிப் பயணமாகட்டும். அல்லது உஹது, ஹீனைன் போர் சம்பவமாகட்டும். இவ்வனைத்து சந்தர்ப்பத்திலும் அல்லாஹ், நவூதுபில்லாஹ். அன்னாருக்கு உதவிக் கரம் நீட்டாமல், ஹஸ்ரத் ஈஸா(அலை) அவர்களுக்கு இக்கட்டான சூழ்நிலை ஏற்பட்டதும் அல்லாஹ்வின் அன்பும் ஆற்றலும் வேகமாகி அவர்களை அல்லாஹ் வானத்திற்கு உயர்த்திவிட்டான். இப்போதும் அவர்கள் உயிரோடு இருக்கிறார்கள். இறுதி காலத்தில் இஸ்லாமிய சமுதாயத்தின் மீது அனைத்து திசைகளிலிருந்தும் தாக்குதல் தொடுக்கப்படும். அப்போது தஜ்ஜாலிய சக்திகள் அனைத்து திசைகளிலிருந்தும் அதன் மீது ஏறி நிற்கும்போது இதே

இஸ்ரவேலர்களின் நபியாகிய ஈஸா(அலை) அவர்கள் முஸ்லிம்களின் ஈடேற்றத்திற்காக வருகை தருவார்கள் என முஸ்லிம்கள் நம்புகின்றனர். இக்கொள்கையால், இதையெடுத்துக் கொண்டு கிறிஸ்தவர்கள் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை விட ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்களுக்கு சிறப்புள்ளது என நிரூபிக்கின்றனர். முஸ்லிம்களால் புனையப்பட்ட தவறான இக்கொள்கையின் காரணமாக அவர்களுக்கு எவ்வித பதிலையும் கொடுப்பதற்கு முஸ்லிம்கள் தகுதியற்றவர்களாகி விட்டனர்.

அஹ்மதிய்யத் வருகை தந்து இந்த தவறான கொள்கையிலிருந்து இஸ்லாமிய உலகிற்கு இரட்சிப்பை வழங்கியது. ஈஸா(அலை) அவர்கள் உயிருடன் இருக்கிறார்கள் என்ற கொள்கையைப் பற்றி திருக்குர்ஆன் மற்றும் நம்பத் தகுந்த நபிமொழிகள் எங்கேயும் கூறப்படவில்லை. மாறாக திருக்குர்ஆனின் 30 வசனங்களும், எண்ணற்ற நபிமொழிகளிலிருந்தும் அவர்களது மரணம் நிரூபிக்கப்பட்டுள்ளது என்பதை ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் உலகிற்கு தெளிவுபடுத்தினார்கள்.

அறிவுப்பூர்வமாகவும் இக்கொள்கை இறை பண்புகளுடன் மோதக்கூடியதாகவும் இணை வைத்தலை தோற்றுவிப்பதாகவும், ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தூய கண்ணியத்தைக் குறைக்கும் கொள்கையாகும் எனக் கூறினார்கள்.

வரலாற்று சாட்சிகளும், தற்காலத்தின் கண்டுபிடிப்புகளும் ஹஸ்ரத் ஈஸா(அலை) அவர்கள் மரணித்துவிட்டதை உறுதிபடுத்தின்றன. இன்று இஸ்லாமிய சமுதாயத்திற்கு, தனது சீர்திருத்தத்திற்காகவும் வழிகாட்டலுக்காவும் ஓர் அந்நிய சமுதாயத்தைச் சேர்ந்த நபியின் தேவையில்லை.மாறாக உண்மை என்னவெனில், இன்று அனைத்து சமுதாயங்களுக்கும் இன்னும் சொல்லப்போனால் முழு மனித இனத்திற்கும் தனது சீர்திருத்தத்திற்காக முஹம்மதிய்ய சமுதாயத்தின் தேவை இருக்கிறது என்ற நற்செய்தியை அஹ்மதிய்யத் முழு உலகிற்கும் அறிவித்துள்ளது. ஆகவே மகிழ்ச்சியில் ஆர்ப்பரித்து நன்றி செலுத்தி சிரம் பணியுங்கள். இன்று ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அடிமைகளிலிருந்து ஒரு உன்னதமான ஆன்மீக வாரிசை அன்னாரின் அடிமையாக அல்லாஹ் அனுப்பியுள்ளான். அவர் தமது தலைவரும் எஜமானருமாகிய ஹஸ்ரத் நபிகள் நாயகம்





(ஸல்) அவர்களின் அடிச்சுவட்டினை பின்பற்றியதன் விளைவாக காலத்தின் இமாமாக ஆக்கப்பட்டுள்ளார்.

அஹ்மது (ஸல்) அவர்களின் மகத்துவம் சிந்தனைகளை விட உயர்ந்தது. அன்னாரின் அடிமையோ காலத்தின் மஸீஹாக இருக்கின்றார்.

## இறுதி நபித்துவத்தின் உண்மையான விளக்கம்

இறுதி நபித்துவம் தொடர்பாகவும் முஸ்லிம்களின் மத்தியில் தவறான எண்ணம் காணப்பட்டது. இன்றும் முஸ்லிம்களிடம் இந்த கொள்கைதான் காணப்படுகிறது. அதாவது எந்த மனிதரை அல்லாஹ் முழு உலகிற்கும் அருட்கொடையாக அனுப்பினானோ அவர் வருகை தந்து அருட்கொடையை பொதுவானதாக ஆக்குவதற்கு பதிலாக இறைவனின் உயர்வான அருட்கொடையின் ஊற்றான நுபுவ்வத்தை நிரந்தரமாக அடைத்துவிட்டார். அதாவது, எந்த அருட்கொடையின் வாக்குறுதியை இறைவன் திருக்குர்ஆனில் மூஃமின்களுக்கு நற்செய்தியின் வடிவில் வழங்கியிருந்தானோ அதன் வாயில் முற்றாக அடைத்து பூட்டப்பட்டு விட்டது என முஸ்லிம்கள் கருதுகின்றனர்.

ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உயர் தகுதிக்கு இழுக்கை ஏற்படுத்தக்கூடிய, கொடிய கொள்கை இதைவிட வேறு ஏதேனும் இருக்க முடியுமா? 'காத்தமுன்னபிய்யீன்' என்பதன் பொருளை புரிந்து கொள்ளாமல் (வெளிப்படையான) வார்த்தைகளில் சிக்கிக் கொள்ளும் முஸ்லிம்கள் தமது தவறான கொள்கையின் விளைவாக கிறிஸ்தவர்களுக்கு அகில உலகின் அருட்கொடை ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தூய உயர் கண்ணியத்தின் மீது அவதூறையும் தீய சொற்களையும் பேசுவதற்கான வழிவகைகளை இவர்களே ஏற்படுத்தி விட்டார்கள். ஆனால் பரிதாபம்! இவர்களது தன்மான உணர்வும் பற்றும் இன்னும் உறக்கத்திலிருந்து எழவுமில்லை; சிந்தித்து, நிலையை உணர்ந்து கொள்ளும் வாய்ப்பபையும் இவர்கள் பெறவில்லை.

கத்மே நபுவ்வத் என்பதன் உண்மையான பொருள், நமது எஜமானர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உலகில் வருகை தந்துள்ள அனைத்து நபியை விடவும் சிறந்த, உயர்ந்த மாபெரும் அற்புதம் வாய்ந்த நபியாவார்கள் என்பதேயாகும் என ஹஸ்ரத்

அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன?

வாக்களிக்கப்பட்ட மஸீஹ்(அலை) அவர்கள் முழக்கத்துடன் உலகிற்கு அறிவித்தார்கள். முழு உலகின் ஈடேற்றமும் அன்னாரது தொடர்புடன் இணைந்துள்ளது. மேலும் அன்னாரது சிறப்புகள் கியாமத் வரை தொடரக் கூடியவையாகும். இப்போது அனைத்து ஆன்மீக அருட்கொடைகளும் அன்னாரைப் பின்பற்றினாலேயன்றி வேறு எவ்வகையிலும் கிடைக்காது என்ற நிபந்தனை விதிக்கப்பட்டுள்ளது. பெறுபவர் எவரும் அன்னாரின் மூலமே பெற இயலும். இந்த வாசலிலிருந்து எவர் பெற்றுக் கொள்வதில்லையோ அவர் நிரந்தரமாக பாக்கியமிழந்தவரே ஆவார். ஹஸ்ரத் வாக்களிக்கப் பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் கூறுகின்றார்கள் : "நாம் நியாயமாகப் பார்த்தால் அனைத்து நுபுவ்வத்திலிருந்தும் உயர் தகுதியுடைய, இளமையான, இறைவனின் உயர்தகுதியுடைய நேசத்தைப் பெற்ற நபியாக ஒரேயொரு ஆண்மகனைத் தான் பார்க்கிறோம். அவரே நபிமார்களின் தலைவரும் ரசூல்மார்களின் கண்ணியமும் தூதர் களின் மணிமகுடமுமாகிய முஹம்மது முஸ்தஃபா (ஸல்) அவர்கள் ஆவார்கள்.அன்னாரது நிழலின் கீழ் பத்து நாட்கள் நடந்தாலே போதும் இதற்கு முன் ஆயிரம் வருடங்கள் நடந்தும் கிடைக்காத அந்த ஒளி கிடைத்துவிடும்." *(ரூஹானி கஸாயின், இலண்டன் வெளியீடு 1984, தொகுதி 12, ஸிராஜே முனீர் பக்கம் 80)*

மேலும் கூறுகின்றார்கள்: "கண்ணியமிக்க இறைவன் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை 'காத்தம்' (முத்திரை) உடையவராக ஆக்கினான். அதாவது மேன்மையை அதிகப்படுத்துவதற்காக அன்னாருக்கு முத்திரையை வழங்கினான். இது வேறு எந்த நபிக்கும் வழங்கப்படவில்லை. எனவேதான் அன்னாரின் பெயர் 'காத்தமுன்னபிய்யின்' ஆக விளங்கியது. அதாவது அன்னாரைப் பின்பற்றுவது நுபுவ்வத்தின் மேன்மைகளை வழங்குகிறது. அன்னாரின் கவனம் நபித்துவத்தை உருவாக்கும் ஆன்மீக ஒளியாகும். மேலும் இந்த 'குவ்வதே குத்ஸியா' எனும் தூய ஆற்றல்கள் வேறு எந்த நபிக்கும் வழங்கப்படவில்லை." *(ரூஹானி கஸாயின், இலண்டன் பதிப்பு 1984, தொகுதி ஹகீகத்துல் வஹீ பக்கம் 100, அடிக்குறிப்பு.)*

### திருக்குர்ஆனின் உயர் தகுதி

திருக்குர்ஆன் எனும் மாபெரும் அருட்கொடை இஸ்லாமிய சமுதாயத்திற்கு வழங்கப்பட்டுள்ளது. இருந்தும் பரிதாபம்!





அஹ்மதிய்யத்தின் தோற்றத்தின் போது அறிவு, ஞானம் மற்றும் நேர்வழியின் நீரூற்றான இவ்வேதம் காட்சிப் புத்தகமாக மாறிவிட்டிருந்தது. அதை முன்னோர்களின் கதை புத்தகம் எனக் கூறத் துவங்கிவிட்டனர். இன்னும் சிலரோ நபிமொழிக்கு இறை வேதத்தைக் காட்டிலும் முக்கியத்துவம் வழங்கத் துவங்கிவிட்டனர். எந்த வேதம் ஞானத்தின் பொக்கிஷமாகவும் மக்களின் நேர்வழியாகவும் ஆக்கப்பட்டதோ அதன் மதிப்பை அறியாத முஸ்லிம்கள் அதன் மகத்துவம் மற்றும் அருள்களிலிருந்து முற்றிலும் அறிவற்றவர்களாகி விட்டனர்.இது எவ்வளவு துர்பாக்கியம்! இத்தகைய காலத்தில் அஹ்மதிய்யத் வருகை தந்து ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் தோற்றம் நிகழ்ந்தது. அன்னார் திருக்குர்ஆனின் உண்மையான அழகிய தோற்றத்தை உலகிற்கு தெளிவுபடுத்தினார்கள். அன்னார் திருக்குர்ஆனை ஓர் உயிருள்ள வேதமாக முன்வைத்தார்கள். நாஸிகே குர்ஆன் (நீக்கப்பட வேண்டிய வசனங்கள்) எனும் கொள்கையை அசைக்க முடியாத ஆதாரங்களைக் கொண்டு தவறான கொள்கை என நிரூபித்து இந்த மகத்தான வேதத்தின் ஒவ்வொரு வாக்கியமும் இறைவன் புறமிருந்துள்ளதாகும் என்றும், இதன் ஒரு புள்ளிக் கூட இறுதிநாள் வரை நீக்கமோ மாற்றமோ செய்யத்தகாதவை என்றும் தெளிவுபடுத்தினார்கள். இவ்வேதம் அறிவு மற்றும் ஞானங்களின் பொக்கிஷமும் முழு உலகின் ஈடேற்றத்திற்கான நீரூற்றுமாகும். அன்னார் கூறினார்கள்: "எவ்வாறு நாம் கண்களின்றி காண முடியாதோ, காதுகளின்றி கேட்க முடியாதோ,நாவின்றி பேச முடியாதோ அவ்வாறே அந்த அன்பிற்குரிய நேசனின் முகத்தை குர்ஆனின்றி ஒருபோதும் பார்க்க முடியாது என்பதை நன்றாக புரிந்து கொள்ளுங்கள்." *(ரூஹானி கஸாயின், இலண்டன் பதிப்பு 1984, பாகம் 10, இஸ்லாமி உஸுல்கி ஃபிலாஸஃபி, பக்கம் 128-129.)*

அன்னார் தனது ஜமாஅத்திற்கு அறிவுரை வழங்கியவாறு கூறினார்கள் : "உங்களுக்கு ஒரு முக்கிய அறிவுரை என்னவென்றால், திருக்குர்ஆனை கைவிடப்பட்ட ஒன்றைப் போல் விட்டு விடாதீர்கள். அதில் தான் உங்களின் வாழ்வு உள்ளது. எவர்கள் குர்ஆனுக்கு கண்ணியமளிப்பார்களோ அவர்கள் வானத்தில் கண்ணியம் பெறுவார்கள். எவர்கள் எந்த ஒரு ஹதீஸையும் எந்த ஒரு கூற்றையும் விட குர்ஆனிற்கு முக்கியத்துவம் வழங்குவார்களோ

அவர்கள் வானத்தில் முக்கியத்துவம் பெறுவார்கள். மனித இனத்திற்காக பூமியில் இப்போது குர்ஆனைத் தவிர வேறு எந்த வேதமுமில்லை. முழு ஆதமின் சந்ததிகளுக்கும் இப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைத் தவிர வேறு எந்த ரஸூலும் பரிந்துரையாளரும் இல்லை.'' (ரூஹானிஹி கஸாயின், இலண்டன் பதிப்பு 1984, பாகம் 19, கிஷ்தி நூஹ் பக்கம் 28)

ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் மற்றும் அவர்களது கலீஃபாக்கள் திருக்குர்ஆனிற்கு எந்த அளவிற்கு சேவையும் ஒப்பற்ற மதிப்புமிக்க ஞானங்களையும் விவரித்து தனது ஜமாஅத்தில் குர்ஆனின் சேவையையும் நேச உணர்வையும் உருவாக்கினார்கள் என்றால், குறிப்பாக அன்னியர்களும் இதனை முழு மனதுடன் ஆமோதித்துள்ளனர். அஹ்மதிய்யல்லாத ஓர் எழுத்தாளர் மதிப்பிற்குரிய மியான் முஹம்மது அஸ்லம் என்பவர் அஹ்மதிய்யத்தின் தலைமையகமான காதியான் சென்று, தாம் கண்ணால் கண்டதைப் பற்றிக் குறிப்பிட்டவாறு எழுதுகிறார் : ''திருக்குர்ஆன் தொர்பாக எந்த அளவுக்கு உண்மையான நேசத்தை இந்த ஜமாஅத்தில் நான் காதியானில் கண்டேனோ அந்த அளவுக்கு வேறு எங்கும் கண்டதில்லை. அஹ்மதிகளின் காதியானில் எனக்கு குர்ஆன் மட்டுமே காட்சியளித்தது. திரும்பும் திசையெல்லாம் குர்ஆன் மட்மே காட்சியளித்தது. சுருக்கமாக காதியானின் அஹ்மதிய்யா ஜமாஅத் எத்தகைய ஜமாஅத் என்றால் உலகில் செயல் ரீதியாக திருக்குர்ஆனை குறிப்பாக அல்லாஹ்விற்காக பின்பற்றியவாறு இஸ்லாத்திற்காக தம்மை அர்ப்பனிக்கின்ற ஒரு ஜமாஅத்தாகும்.'' *(அல்பதர் காதியான், 13 மார்ச், 1913, பாகம் 13, எண் 2, பக்கம் 6-9)*

அஹ்மதிகளின் உள்ளங்களில் திருக்குர்ஆனின் இந்த உண்மையான, நேசமிக்க, ஈமான் நிறைந்த ஒரு முன்மாதிரியை இந்த அடியேனும் இலண்டனில் கண்டிருக்கின்றேன். எங்களது ஓர் தூய ஆங்கிலேய அஹ்மதி தாவூது ஸம்ரஸ் மர்ஹூம் அவர்கள் தனது எழுபதாம் வயதில் உண்மையான நேசத்தையும் பற்றையும் கொண்டவாறு திருக்குர்ஆனைப் படிக்கத் துவங்கினார். பத்து பாகங்களைப் படித்து தனது உள்ளத்தை பிரகாசமாக்கியிருந்தார். அதற்குள் அவருக்கு இறைவனிடமிருந்து இறுதி அழைப்பு (மரணம்) வந்துவிட்டது.





சுருக்கமாக கூறுவதென்றால் அஹ்மதிய்யத் தவறான கொள்கைகளை வேரறுத்து உலகிற்கு இந்த உண்மையான கொள்கைகள் மற்றும் கோட்பாடுகளை வெளிச்சமிட்டுக் காட்டியது. அவை இறைவனது வல்லமை, இஸ்லாத்தின் மகத்துவம், ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உயர் தகுதி ஆகியவற்றை நிரூபிக்கக்கூடியவை ஆகும். காலத்தின் நியாயத் தீர்ப்பு வழங்குபவராகிய ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் இஸ்லாத்தின் முகத்தை அனைத்து கறைகளை விட்டும் துடைத்து தூய்மையாக்கினார்கள். இவ்வாறு அன்னாரின் தோற்றத்தின் நோக்கம் அழகிய முறையில் முழுமையாக நிறைவேறியது. அன்னார் கூறினார்கள்: ''உயிருள்ள வேதம் திருக்குர்ஆன் ஆகும். உயிருள்ள மார்க்கம் இஸ்லாம் ஆகும். உயிருள்ள ரஸூல் முஹம்மது முஸ்தஃபா (ஸல்) அவர்கள் ஆவார்கள் என்பதை நிரூபிப்பதற்காகவே இறைவன் என்னை அனுப்பியுள்ளான்.'' *(மஜ்மூஆ இஷ்திஹாராத் இலண்டன் பதிப்பு 1984, பாகம் 3, பக்கம் 267, இஷ்திஹார் 25 மே 1900)*

இந்த மூன்று அடிப்படையான விஷயங்கள் மட்டுமின்றி அஹ்மதிய்யத் முஸ்லிம்களின் மத்தியில் காணப்பட்ட தவறான கொள்கைகளைச் சீர்திருத்தி முஸ்லிம்களுக்கு 'ஸிராதே முஸ்தகீம்' எனும் நேர்வழியைக் கண்பித்தது. அவற்றில் இமாம் மஹ்தி (அலை) அவர்களின் வருகை, தஜ்ஜாலின் உண்மை, ஜிஹாது என்பதன் உண்மையான இஸ்லாமிய சிந்தனை, உண்மை ஏகத்துவம், குர்ஆன் ஹதீஸின் ாகுதி, மகத்துவம் போன்ற எண்ணற்ற விஷயங்கள் அடங்கும். அவற்றைப் பற்றிய விரிவான விளக்கங்கள் ஜமாஅத்தின் பிரசுரங்களில் உள்ளன.

## ஆன்மீகக் கருவூலங்கள்

''அவனே தனது தூதரை நேர் வழியுடனும் உண்மையான மார்க்கத்துடனும் இதனை அவன் எல்லா மார்க்கங்களின் மீதும் வெற்றிபெறச் செய்வதற்காக அனுப்பினான். (இறைவனுக்கு) இணைவைப்பவர்கள் (இதனை) எந்த அளவு வெறுத்தாலும் சரியே.'' *(அதிகாரம்:அஸ்ஸஃப் வசனம்:10)*

மேற்கண்ட இறைவசனத்திற்கேற்ப, வரக்கூடிய வாக்களிக்கப்பட்ட மஸீஹ் இஸ்லாத்திற்கு மற்றெல்லா மார்க்கங்களின் மீதும் மேலோங்குதல் வழங்குவதற்குக் காரணமாக

அமைவார் என்பது விதிக்கப்பட்டுள்ளது. ஹஸ்ரத் வாக்களிக் கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் மூலமாக இந்த முன்னறிவிப்பு மாபெரும் மகத்துவத்துடனும் வல்லமையுடனும் நிறைவேறியது. இதன் ஓர் உன்னத முன்மாதிரி லாஹூரில் 1896இல் நடைபெற்ற மாபெரும் 'சர்வ சமய மாநாடு' ஆகும். இதில் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் நிர்ணயிக்கப்பட்ட ஐந்து கேள்விகளுக்கான பதில்களில் இஸ்லாமிய போதனைகளின் தத்துவ ஞானத்தை எந்தளவுக்கு அழகிய முறையில் எடுத்து வைத்தார்கள் என்றால், இந்த உரை அனைத்தையும் விட சிறந்தது என அனைவரும் ஏற்றுக்கொண்டார்கள்.

அல்லாஹ் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களுக்கு தன்புறமிருந்து அறிவாற்றலையும் ஞானங்களையும் வழங்கி உள்ளங்களை ஈர்த்து சிறந்த தாக்கத்தை ஏற்படுத்தும் வகையில் அவற்றை அழகிய நடையில் எடுத்துக் கூறும் ஆற்றலையும் வழங்கினான். அன்னாரின் சொற்கள் உள்ளங்களை ஈர்க்கும் அசாத்திய தாக்கத்தைக் கொண்டவையாகும். இவ்விஷயத்தை எதிரிகளும் ஒப்புக் கொண்டனர். அன்னாரின் மரணத்தின் போது இந்தியாவின் இமாம் என்றழைக்கப்பட்ட மவ்லானா அபுல்கலாம் ஆஸாத் அன்னாரை ஓர் வெற்றி வாகை சூடும் படைத்தளபதி எனக்குறிப் பிட்டார். அன்னாருக்கு கிடைக்கப்பெற்ற இந்த ஞானமிக்க அறிவாற்றல் வானத்திலிருந்து கிடைத்த போர் ஆயுதமாகும். இது அனைத்து பொய்யின் கோட்டைகளையும் இடித்து தரைமட்ட மாக்கியவாறு சென்றது. ஈடு இணையற்ற தாக்கத்தை ஏற்படுத்தக் கூடிய இந்தக் கருவூலம் அன்னாரது மரணத்திற்குப் பின்னும் குறைவடைய வில்லை. இந்த ஞானக் கூற்றுகள், இஸ்லாத்தின் வெற்றிக்கு ஆதாரமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. இந்த ஞானக்கடலிலிருந்து அஹ்மதிய்யா ஜமாஅத்தின் கொள்கை பரப்புநர்கள் பலனடையவே செய்கின்றனர். அஹ்மதிய்யல்லாத ஆலிம்களும் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் நூல்களிலுள்ள கருத்துகளை தமது சொற்பொழிவுகளிலும் நூல்களிலும் அதிகமதிகமாக பயன்படுத்து கின்றார்கள். ஆனால் அதன் ஆதாரத்தை வழங்க அவர்களுக்கு தைரிய மில்லை. இதுதான் அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியுள்ள வலுவான ஞானக்கூற்றுகளாகும். இது ஒவ்வொரு போட்டியின் மைதானத்திலும் வெற்றிக்கான உத்திரவாதமாகும். குறிப்பாக





கிறிஸ்தவர்களுக்கு எதிரில் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் ஆதாரங்கள் எத்தகையவை என்றால் அவற்றிற்கு, கிறிஸ்தவர்களால் ஒருபோதும் பதிலளிக்க இயலாது.

ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வரவிருக்கும் வாக்களிக்கப்பட்டவரின் ஒரு வேலை 'சிலுவையை முறிப்பதாகும்' எனக்கூறியிருந்தார்கள். இதன் மாபெரும் துவக்கம் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் காலத்திலும் அதன் பிறகு ஒவ்வொரு காலத்திலும் மகத்தான முறையில் காணப் படுகின்றன. ஹஸ்ரத் வாக்களிக்கப் பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் பொய்யை தோல்வி காணச் செய்யும் தனது ஆதாரங்களால் 'பாதிரி லீஃப் ராயை' வாயடைக்கச் செய்தார்கள். இதனை மௌலவி நூர்முஹம்மது சாஹிப் ஏற்றுக் கொண்டவாறு இவ்வாறு கூறினார்: ''அவர் இந்தியா முதல் கிறிஸ்துவ நாடுகள் வரையுள்ள அனைத்து பாதிரியார் களையும் தோல்வி காணச் செய்து விட்டார்'' *(முகவுரை, மு அஸ்ஸஸ் நுமாகலான் குர்ஆன் ஷெரீஃப் முதர்ஜிம் வெளியீடு 1934-பக்கம் 30)*

ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் உலகிற்கு வழங்கியுள்ள ஆன்மீக கருவூலங்கள் 90க்கும் அதிகமான நூல்கள் வடிவில் வெளியிடப்பட்டுள்ளன. அவர்களுக்குப்பின் அவர்களது கலீஃபாக்கள் இந்த அமைப்பை தொடரச் செய்து நூல்வடிவில் புதிதிலும் புதிய ஞானங்களை உலகிற்கு வழங்கிக் கொண்டிருக் கிறார்கள். ஜமாஅத்தின் மார்க்க அறிஞர்களும் இந்த தித்திப்பான நீரூற்றிலிருந்து எண்ணற்ற அருட்களைப் பருகியவாறு மகத்தான வெளியீடுகளின் அன்பளிப்பை உலகிற்கு வழங்கியுள்ளனர். 57 மொழிகளில் திருக்குர்ஆன் வெளியீடு, குர்ஆன் விளக்கவுரைகள், நபிமொழிகளின் விளக்கவுரைகள், பல்வேறு இஸ்லாமிய தலைப்புகளில் கட்டுரைகள், தற்போதைய பிரச்சனைகளின் தீர்வு குறித்த நூல்கள் வெளியீடு, அனைத்து உலக மொழிகளிலும் இந்நூல்களின் மொழியாக்கம், ஜமாஅத் தலைமையகம் மட்டுமின்றி பல்வேறு நாடுகளில் வெளியாகும் பத்திரிக்கைகள், இதழ்கள். இவையனைத்தும் அஹ்மதிய்யத்தின் ஆன்மீக அறிவாற்றல் எனும் ஞான ஊற்றுக்களாகும். இவை நாலாப்புறமும் வேகத்துடன் பாய்ந்து கொண்டேயிருக்கின்றன.

அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியுள்ள அறிவாற்றல் மற்றும் ஞானத்தின் இம்மாபெரும் செல்வத்தைக் குறித்து ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் தெளிவாகக் கூறுகிறார்கள்.

''அன்பு எனும் நாட்டின் அரசாட்சியும் இறைஞானம் எனும் கருவூலங்களும் எனக்கு வழங்கப்பட்டுள்ளன. அவற்றை இறையருளால் மக்கள் வாங்கி வாங்கி சோர்ந்து விடும் அளவுக்கு நான் வாரிவாரி வழங்குவேன்''. *(ருஹானி கஸாயின், இலண்டன் வெளியீடு 1984, தொகுதி 3, பக்கம் 566-இஸாலே அவ்ஹாம்)*

இதைப்படித்தவுடன் இந்த முன்னறிவிப்புள்ள ஒரு நபிமொழி நினைவுக்கு வருகிறது: ''அதாவது வரவிருக்கும் மஸீஹ் செல்வத்தை வாரி வழங்குவார். எதுவரையென்றால் அதை வாங்க எவரும் முன்வரமாட்டார்கள்'' (புஹாரி கிதாப் பதவுல் கல்க்; பாப், நுஸூலு ஈசப்னு மர்யம் அலைஹிவஸ்ஸலாம்)

இன்று இந்த முன்னறிவிப்பு எவ்வளவு மகத்தான முறையில் நிறைவேறியுள்ள தென்றால் முஹம்மதிய்ய மஸீஹ் அறிவு மற்றும் இறை ஞானத்தின் கருவூலத்தை தண்ணீரைப் போன்று வாரியிறைத்து உலகை செழிக்க வைத்து விட்டார்கள். அன்னார் ஒரு கவிதையில் எவ்வளவு அருமையாகக் கூறினார்கள்: ''ஆயிரம் வருடங்களுக்கும் மேலாக புதையுண்டு கிடந்த அக்கருவூலங்களை இப்போது நான் வழங்குகிறேன். நம்பிக்கை கொண்டவர் ஒருவர் கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

## பொதுத்தொண்டு எனும் களத்தில் துடிப்பான செயல்பாடுகள்

அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன? என்பதல்ல கேள்வி. நற்செயல் மற்றும் மேன்மையின் களத்தில் எந்தபொருளை அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் உலகிற்கு வழங்கவில்லை? என்பதே கேள்வி. எந்த ஒரு சமுதாயத்தின் அல்லது ஜமாஅத்தின் செல்வம் என்பது அதன் மக்களேயாவார்கள். அவர்களின் தொகுப்பினால் ஜமாஅத் உருவாகிறது. அந்த விதத்தில் அல்லாஹ் தனது கரங்களால் நிறுவிய இந்த ஜமாஅத்திற்கு எண்ணற்ற நற்பேறு பெற்றோரை வழங்கி யுள்ளான். அவர்களின் எண்ணிக்கை தனது நிலையிலும் தரத்திலும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே





செல்கிறது. அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தைச் சேர்ந்த ஒவ்வொரு வரும் அனைத்து இடத்திலும் மனிதயினத்திற்கு சேவை செய்ய வேண்டும் என்று உணர்ச்சி பூர்வமாக தத்தமது நாடுகளில் சமுதாயத்திற்கும் மனிதயினத்திற்கும் சேவை செய்வதில் செயல்பட்டுக்கொண்டிருக்கின்றனர். ஒவ்வொரு நாட்டிலும் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் தன்னை சமூகச் சேவைகளில் முழுமையாக இணைத்துள்ளது. அனைத்து இடங்களிலும் ஆமோதிக்கப்படும் இந்த பொதுச் சேவைகள் மட்டுமின்றி ஜமாஅத்தின் கலீஃபாக்களும், தலைவர்களும், பல்வேறு துறைகளில் இறைவனால் சிறந்த தகுதிகள் வழங்கப்பட்ட ஜமாஅத் உறுப்பினர்களும் சமுதாயத்திற்காகவும் நாட்டிற்காகவும் மனித இனத்திற்காகவும் தனது சேவைகளை எப்போதும் அர்ப்பணித்து வருகின்றனர் என்பதற்கு ஜமாஅத்தின் வரலாறு சாட்சியாகும்.

அஹ்மதிய்யத் உலகிற்கு என்ன வழங்கியது எனக் கேட்பவர்கள் கேட்கின்றனர். நான் கூறுகின்றேன். எந்த அளவுக்கு ஜமாஅத் உலகின் சேவைக்காக தன்னை முன்வைத்துள்ளது என்பது அஹ்மதிய்யத்தின் வரலாற்றைப் புரட்டிப் பாருங்கள் தெரியும். சேவையின் எந்த மைதானமாயினும் சரி. ஜமாஅத்தின் இந்த ஆதரவு கிழக்கிலும் மேற்கிலும் ஒவ்வொரு மைதானத்திலும் ஓர் உயர் முன்மாதிரியை தன்னுள் வைத்துள்ளது. பேச்சு உலகில் ஹஸ்ரத் ஷேக் முஹம்மது அஹ்மது மஸ்ஹர் அவர்களின் சேவைகள். ஆப்பிரிக்காவின் வளர்ச்சி மற்றும் முன்னேற்ற பணிகளில் ஷேக் உம்ரி உபைதி அவர்களின் சேவைகள். சமுதாய முன்னேற்றத்தில் ஹஸ்ரத் மிர்ஸா முஸஃப்பர் அஹ்மது அவர்களின் சேவைகள். விஞ்ஞான மைதானத்தில் டாக்டர் பேராசிரியர் அப்துஸ் ஸலாம் அவர்கள் செய்த பணியும் பெற்ற பெயரும் புகழும் கூறத்தேவையில்லை. புகழ்பெற்ற இவர் 'நோபல்' பரிசைப் பெற்று முழு இஸ்லாமிய உலகையும் பெருமையோடு தலைநிமிர வைத்தார். பிறகு பரிசின் மூலம் கிடைக்கப் பெற்ற அனைத்து தொகையையும் தன் விஞ்ஞான வளர்ச்சிக்காக அர்ப்பணித்து தியாகத்தின் ஓர் ஒளிமயமான முன்மாதிரியை நிலைநாட்டினார். இந்த அஹ்மதி முஸ்லிம் விஞ்ஞானி முஸ்லிம்களின் மத்தியில் ஓர் தூண்டுதலையும் தைரியத்தையும் வழங்கினார். நம்பிக்கையை வளர்த்து முன்னேற்றத்தின் எண்ணத்தை வழங்கினார்.

உலகநீதி மன்றத்தில் நேர்மை நீதி என சட்டத்திற்கு ஆற்றிய தொண்டு, இவையனைத்தையும் விட பல்வேறு இஸ்லாமிய நாடுகளுக்கு சுதந்திரம் எனும் கொடை கிடைக்க வேண்டும் என்பதற்காக துடியாத்துடித்த ஹஸ்ரத் 'சவுத்ரி முஹம்மது ஸஃபருல்லா கான்' அவர்களின் சேவைகள் உலக வரலாற்றில் பொன்னெழுத்து களால் பொறிக்கப்பட்டுள்ளது. இந்த அஹ்மதிய்யத்தைச் சார்ந்தவரின் ஒப்பற்ற குறிப்பிடத்தக்க தனித்தன்மை வாய்ந்த சேவைகளை இந்த பார்வையற்ற முல்லாக் களைத் தவிர அறிவுள்ள எவருக் காவது மறுக்க துணிவுள்ளதா? இந்த முல்லாக்களைக் குறித்து பாகிஸ்தான் உச்சநீதி மன்றத்தின் முதன்மை நீதிபதி முனீர் அவர்களுக்கு இவ்வாறு கூற நேர்ந்தது:

''சவுத்ரி ஸஃபருல்லாகான் அவர்கள் முஸ்லிம்களுக்கு எவ்வித எதிர்பார்ப்புமின்றி தன்னலமற்ற சேவைகளை செய்திருக்கிறார். அவ்வாறிருந்தும் சில ஜமாஅத்துக்கள் நீதிமன்ற விசாரணையில் அவரைப் பற்றி எவ்வாறு பேசியிருக்கின்றார்களென்றால் அது வெட்கக் கேடானதும் நன்றிக் கேட்டிற்கு ஆதாரமு மாகும்''.*(ரிப்போர்ட் தஹ்கீகாத்தீ அதாலத், ஃபஸாதாதே பஞ்சாப் 1953 -பக்கம் 209 பஞ்சாப் அரசு வெளியீடு)*

விசுவாசமுள்ள அஹ்மதிய தொண்டர்களின் எந்தெந்த மைதானங்களின் சேவைகளை குறிப்பிடுவது! இந்த சேவைகள் உலகின் ஒவ்வொரு பகுதியிலும் பரவிக்கிடக்கின்றன. ஒருபோதும் அழிக்க முடியாத அளவுக்கு வரலாற்றின் அங்கமாக இவை மாறிவிட்டன.

## மாசற்ற படைப்பின தொண்டு

அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன? என்ற இக்கேள்விக்கு பல கோணங்களில் பல பதில்களை கூறலாம். அவற்றில் ஒன்று, அஹ்மதிய்யத் தனக்குரிய அனைத்தையும் உலகிற்கு வழங்கிவிட்டது. அல்லாஹ்வினால் இந்த ஜமாஅத்திற்கு வழங்கப்பட்ட அனைத்து அருட்கொடை களையும் உலகின் முன்னேற்றம் மற்றும் நலனிற்காக செலவு செய்வதிலும் வழங்கு வதிலும் ஒருபோதும் கருமித்தனத்துடன் நடந்து கொண்டதில்லை. ஏனென்றால் கருமித்தனம், குறுகிய பார்வை இந்த ஜமாஅத்தின் இயல்பிலேயே இல்லை. அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் முழு





உலகிற்கும் சேவை புரியும் ஒரு ஜமாஅத்தாகும். ஒரு மாசற்ற, தளராத சேவையுடன் 'எல்லோரிடத்தும் அன்பு; எவரிடத்தும் பகைமையில்லை' என்ற கோட்பாட்டுடன் துடிப்பாக பணியாற்றும் ஜமாஅத்தாகும். ஆகவேதான் இந்த ஜமாஅத் தனது அனைத்து பொருளையும் இறைவனால் வழங்கப்பட்ட அனைத்து கொடைகளையும் மனித இனத்தின் சேவைக்காக அர்ப்பணித்து விட்டது.

சேவை செய்வதற்கான வாய்ப்பு காணப்படும்போது அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் தொண்டர்கள் எப்போதும் மாசற்ற சேவை செய்யும் எண்ணத்துடன் மார்க்க சமுதாய வேறுபாடின்றி இந்த மைதானத்தில் இறங்கி விடுகிறார்கள் என்பதற்கு அஹ்மதிய்யத்தின் வரலாறு சாட்சியாகும். ஜமாஅத்தின் எண்ணிக்கையோ குறைவு. வசதிகளோ எல்லைக்குட்பட்டது. அவ்வாறிருந்தும் ஜமாஅத் எந்த அரசாங்கத் திடமிருந்தும் எவ்வித உதவியையும் கேட்பதுமில்லை, பெறுவதுமில்லை. இதன் அனைத்து செல்வங்களும் ஜமாஅத்தின் பற்றுமிக்கவர்கள் தனது கடின உழைப்பின் மூலம் கிடைப்பவற்றிலிருந்து தனது தேவைகளை பிற்படுத்திவிட்டு ஜமாஅத்தின் மடியில் போடுகின்ற சந்தாக்களேயாகும். இவ்வாறான இக்கட்டான சூழ்நிலை இருந்தும் மனித இன சேவையின் மைதானத்தில் ஒவ்வொரு இடத்திலும் இதே ஜமாஅத் இரவு பகலாக துடிப்புடன் பணியாற்றுவதை பார்க்க முடிகிறது.

ஆப்ரிக்க நாட்டின் பட்டினி பஞ்சத்தின் சோதனைக் காலங்களிலும் சரி, குஜராத் நிலநடுக்கத்தில் பாதிக்கப்பட்டவர்களின் தேவைகளை நிறைவேற்றும் போதும் சரி, பாகிஸ்தானின் மழைவெள்ளத்தில் பாதிக்கப் பட்டவர்களுக்கான உதவிகளாயினும் சரி, அல்லது ஜப்பான் போன்ற முன்னேற்றமடைந்த நாட்டில் ஏற்பட்ட நிலநடுக்கத்தில் வீடுகளை இழந்தவர்களுக்கு உணவுக்கான ஏற்பாட்டை செய்வதிலும் சரி, அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் தன்னார்வத் தொண்டர்கள் சேவைச் சின்னத்தை ஏந்தியவாறு பணிவுடன் தீவிரமாக சேவையாற்றுவதை காணமுடிகிறது. ஜமாஅத்தின் 'HUMANITY FIRST' (மனிதம் முதலில்) எனும் உலகளாவிய பொதுநலச் சேவை அமைப்பு பணிவுடன் ஓரிடத்தில் மக்கள் குடிப்பதற்கான

தூய்மையான குடிநீரை வழங்குகிறதென்றால், மற்றுமோர் இடத்தில் கண்பார்வை குறைபாடுள்ள மக்களுக்கு கண்களில் ஒளியை அன்பளிப்பாக வழங்குவதை காணமுடிகிறது. எவர்களுடைய உடல் உறுப்புகள் துண்டிக்கப்பட்டனவோ அவர்களுக்கு செயற்கை உறுப்புகளை வழங்குகிறது. தங்குமிடமற்றவர்களுக்கு வீடு கட்டித்தருகிறது. வீடுவீடாக சென்று பசித்தவர்களுக்கு உணவையும் குழந்தைகளுக்கு பாலையும் வழங்க ஏற்பாடு செய்கிறது. இவ்வனைத்து சேவைகளும் ஒரு புகழுக்காக செய்யவில்லை அல்லது ஏதேனும் உலக ஆதாயத்திற்காக செய்யவில்லை. மாறாக இறைவனது திருப்தியை பெறுவதற்காக மட்டுமேயாகும். இதுவே இஸ்லாமிய போதனையும் அஹ்மதிய்யத்தின் நடைமுறை யுமாகும்.

அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் ஓர் ஆன்மீக மார்க்கத்தைக் கொண்ட ஜமாஅத் தாகும். இதன் நோக்கம் முழு உலகத்தாரையும் இறைவன் பால் அழைத்து இஸ்லாத்தின் தூதை உலகின் எல்லை வரை எட்டவைத்து மனித இனத்திற்குள் ஒரு தூய புரட்சியை ஏற்படுத்துவதேயாகும். இவ்வாறான உயர்நோக்கங்களுடன் தனது எல்லைக் குட்பட்ட சக்தியின் மூலமாக இயன்ற அளவு மனிதயினத்தின் அறிவு, சமூகம், வாழ்வாதாரம் உயரவும் மேம்படவும், இதுவும் இஸ்லாமிய மார்கத்தின் ஓர் அங்கமும் இறைவனது பார்வையில் விரும்பத்தக்கதுமாகும் எனக்கருதி இரவு பகலாக துடிப்புடன் செய்லாற்றிக் கொண்டிருக்கிறது. கல்வி, மருத்துவ வசதியில்லாத அல்லது பற்றாக்குறையுள்ள உலக நாடுகளில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் சேவையின் இந்தக் கொடியை பல வருடங்களாக மார்க்க சமுதாய வேறுபாடின்றி மனித யினத்தின் உண்மையான மாசற்ற சேவை மனப்பான்மையுடன் ஒவ்வொரு மைதானத்திலும் தீவிரமாக செயலாற்றியவாறு உயர்த்திக் கொண்டிருக்கிறது.

ஜமாஅத்தின் எண்ணிக்கையைப் பொருத்தவரை இப்போது (அதாவது இந்த சொற்பொழிவு ஆற்றப்பட்ட 2003ம் ஆண்டின் நிலவரப்படி) உலகின் '176' நாடுகளில் ஜமாஅத் வலுவாக நிலைநாட்டப்பட்டுள்ளது. (தற்போது 194 நாடுகளில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் பரவியுள்ளது.) 13291 பள்ளி வாயில்கள் (உலகம் உழுவதும்) கட்டப்பட்டுள்ளன. இந்த ஆன்மீக அருள் மழையுடன் இப்போது ஜமாஅத் சார்பாக முன்னேற்றமடைந்த





நாடுகளில் 373 பள்ளிக்கூடங்கள், 5 கல்லூரிகள் உள்ளன. இவை அறிவின்மை எனும் இருளில் அறிவு எனும் ஒளியை பரப்பிக் கொண்டிருக்கின்றன. இவ்வாறே 36 மருத்துவமனைகள் இயங்குகின்றன. அவை ஏழைகளுக்கு மருத்துவ உதவிகளை கட்டணமின்றி அளித்து வருகின்றன. மனிதயினத்தின் சேவை மைதானத்தில் ஒரு மாபெரும் சேவையை அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் குறிப்பாக நான்காவது கிலாபஃத்தின் காலகட்டத்தில் அளித்தது. அதாவது ஹோமியோபதியின் மூலமாக உலகிற்கு பலனுள்ள எளிய மருத்துவ முறையை பற்றிய அறிவை வழங்கியது. இந்த முயற்சியின் வெற்றியில் ஹஸ்ரத் நான்காவது கலீஃபத்துல் மஸீஹ் அவர்களின் கை உள்ளது. அவர்களே இரவு பகல் பாராது இது தொடர்பாக விரிவுரைகளும் நிகழ்த்தி நூல்களும் எழுதினார்கள். செயல்ரீதியாக முழு உலகிலும் குறிப்பாக பின்தங்கிய நாடுகளில் ஹோமியோபதி மருத்துவமனைகளை திறந்தார்கள். இப்போது அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் சார்பாக உலகிலுள்ள 55 நாடுகளில் 632 ஹோமியோபதி மருத்துவமனைகள் திறக்கப்பட்டுள்ளன.

ஏழைகள் மற்றும் நலிவடைந்த மக்களுக்காக அசாதாரணமாக குணமளிக்கும் இம் மருத்துவம் எந்த அளவுக்கு தடையின்றி எளிதாக கிடைக்கின்றது என்றால் செயல்ரீதியாக ஒவ்வோர் அஹ்மதியின் வீடும் ஒரு மருத்துவமனையாக மாறிவிட்டது. இதன் பயன் அஹ்மதிகளுக்கு மட்டுமின்றி முழு உலகிற்கும் கிடைத்துக் கொண்டிருக்கிறது

இம்மாபெரும் சாதனை, மாசற்ற மனிதயினச் சேவையின் பொன்னான உதாரணம், 'உங்களிடமிருந்து எந்த கூலியையோ (நீங்கள்) நன்றி செலுத்து வதையோ நாங்கள் விரும்புவதில்லை' என்ற திருக்குர்ஆன் வசனத்தின் விளக்கமாகும். அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன? எனக் கேட்பவர்களுக்கு இது ஒரு பதிலாகும்.

### முஸ்லிம் தொலைக்காட்சி அஹ்மதிய்யா (MTA)

இக்கேள்விகளுக்கான இன்னொரு பதில், அஹ்மதிய்யத் தனது உலகளாவிய ஒளிபரப்பாகிய MTA மூலம் உண்மை இஸ்லாத்தின் குரலை முதன் முறையாக முழு உலகிற்கும் வழங்கியது. ஒரு காலத்தில் ஜமாஅத்தின் வசம் உலகளவில் ஒளிபரப்பிற்கான

தொலைக்காட்சி அல்லது வானொலி போன்ற எந்த வசதியும் இருக்கவில்லை. ஏதேனும் ஒரு வானொலியில் சில நிமிடங்கள் பெறுவதென்பது கடினமானதாக இருந்தது. உலகின் ஒரு சிறிய நாட்டிலோ அல்லது உலகின் ஏதாவது மூலையில் ஒரு சிறிய வானொலி நிலையத்தை எப்படியாவது அமைத்து அதன் மூலம் அஹ்மதிய்யத் எனும் உண்மை இஸ்லாத்தின் குரலை உலகிற்கு எட்டவைத்து எந்த மஹ்தி வரவுள்ளாரோ, எந்த வாக்களிக்கப்பட்ட மஸீஹின் வருகையைப் பற்றி கூறப்பட்டுள்ளதோ அவர் வந்து விட்டார் என்பதை உலகிற்கு தெரிவிக்க வேண்டும் என்று ஜமாஅத் தீவிரமாக விரும்பியது. ஆனால் இந்த நோக்கத்தைப் பூர்த்தி செய்ய எந்த வழியும் தென்படவில்லை. பிறகு ஒரு நேரம் வந்தது. அப்போது அல்லாஹ் கூரையைப் பிய்த்துக் கொண்டு MTA எனும் இந்த உலகளாவிய மாபெரும் அன்பளிப்பை எவராலும் நம்பமுடியாத விதத்தில் எதிர்பாராத விதமாக வழங்கினான். இந்த அருட் கொடையை வழங்கியதில் இறைவனுக்கு எந்த அளவுக்கு நாம் நன்றி செலுத்தினாலும் குறைவே. ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் ஒரு கவிதையில் இஸ்மவூ ஸவ்தஸ் ஸமாஃ ஜாஅல் மஸீஹ் ஜாஅல் மஸீஹ் என்று கூறியிருந்தார்கள். அதாவது, மஸீஹ் வந்து விட்டார்; மஸீஹின் தோற்றம் நிகழ்ந்து விட்டது எனும் வானத்தின் முழக்கத்தை கேளுங்கள். அன்னாரது இந்த அறிவிப்பு எண்ணிலடங்கா தோற்றங்களுடன் அவர்களது உண்மைத்துவத்தை அறிவிக்கும் வானத்தின் அடையாளங்களைப் பற்றியதாகும். ஆனால் பாருங்கள், இறைவன் எவ்வாறு இவ்விஷயத்தை சொல்வடிவிலும் செயல் வடிவிலும் உண்மையாக்கிவிட்டான். இன்று முழு இஸ்லாமிய உலகிலும் தனக்கென ஒரு தொலைக்காட்சி நிலையத்தை நிறுவி 24 மணி நேரமும், பல்வேறு மொழிகளில் இஸ்லாம் மற்றும் அஹ்மதிய்யத்தின் தூதை ஒளிபரப்புகின்ற ஒரே ஜமாஅத் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் மட்டுமேயாகும். ஏகத்துவத்தின் இம்முழக்கம் கேட்காத எந்த ஒரு பகுதியும் இடமும் இந்த உலகப்பரப்பில் இன்று இல்லை. இதே போல் தனது முழக்கத்தை முழு உலகிலும் ஒளிபரப்பக்கூடிய வேறு எந்த மார்க்கமும் இன்று இல்லை. இது இந்த ஜமாஅத்தின் மீதுள்ள இறைவனின் மாபெரும் அருளாகும். இறைவனால் ஏற்படுத்தப்பட்ட இந்த ஜமாஅத்தின் தொலைக்காட்சி எவ்வாறனது என்றால் இதன் முழக்கம் உலகின்





மூலை முடுக்குகளிலெல்லாம் கேட்கிறது. மேலும் அனைத்து இடங்களிலும் அனைத்து குக்கிராமங்களிலும் ஓர் இறை கொள்கைக்கு குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறது. அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியது என்ன? என்று சிலர் கேட்கின்றனர். நான் கூறுகிறேன் உலகில் வசிப்பவர்களே! தீவுகளில் வசிப்பவர்களே! காடுகளில் வசிப்பவர்களே! நீங்கள் எழுந்து உங்கள் தொலைக்காட்சியை இயக்கி இன்று உங்களது வீடுகளில் வந்தடைந்துள்ள நீங்கள் மறந்து விட்ட அந்த இறைவன் பக்கம் உங்களை அழைக்கின்ற இந்த வானின் அழைப்பை கேளுங்கள். உங்களை இஸ்லாத்தின் பக்கம் அழைக்கின்ற காலத்தின் மஸீஹின் இந்த அழைப்பை கேளுங்கள். அவர் உங்களுக்கு ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தூதை எட்டவைக்கின்றார். ஆம்! இது ஒரு காலத்தில் காதியானிலிருந்து எழுந்த அதே குரல் தான். இந்த அளவுக்கு மகத்துவத்துடன் உள்ளத்தை ஆர்ப்பரிக்க வைக்கும் அவரது இந்த இடி முழக்கம் இப்போது முழு உலகிலும் கேட்பதை பாருங்கள்:

‘இதற்கு இறைவனது அரியணையோடு தொடர்பு இல்லையெனில் பிறகு எப்படி காதியானின் முழக்கம் முழு உலகிலும் கேட்கிறது ?’

அஹ்மதிய்யத் MTA வாயிலாக இஸ்லாத்திற்கு ஒரு நாவையும் ஒரு சகாப்தத்தையும் வழங்கியுள்ளது. அது உலகின் அனைத்து திசைகளிலுமுள்ள நல்லியல்பைக் கொண்டவர்களின் உள்ளத்தை இஸ்லாத்தின் வழியில் சுவர்க்கமாக மாற்றியுள்ளது. உலகின் அனைத்து இடங்களிலும் இந்த குரல், உள்ளக் கதவுகளை தட்டிக் கொண்டிருக்கிறது. கடும் எதிர்ப்பைக் காட்டுகின்ற மவ்லவிமார்கள் கதவுகளை அடைத்துக் கொண்டு இந்த சப்தத்தை கேட்கிறார்கள். இருந்தும் பரிதாபம்! உள்ளம் மரணித்து விட்டதன் காரணமாக அவர்களது கல் இதயங்களில் உண்மையின் தாக்கம் வெளிப்படுவதில்லை. அல்லது வேலை, வருமானம் போன்றவை தடையாக வந்து நிற்கின்றன. இன்று MTA இஸ்லாத்திற்கு ஒரு வலுவான குரலாக மாறிக் கொண்டிருக்கிறது என்பது ஓர் உண்மையாகும். உள்ளுக்குள் ஒரு மாபெரும் ஆன்மீக புரட்சியை ஏற்படுத்தி கொண்டிருக்கிறது. இதன் விளைவு மேன்மேலும் பிரகாசமாகிக் கொண்டே செல்கின்றன.

## பொருள் தியாகங்கள்

மார்க்கத் தேவைகளுக்காக தனது செல்வங்களை இறைவழியில் செலவு செய்வது ஈமான் மற்றும் முஃமின்களின் தனித்த ஓர் அடையாளமாகும். கடின உழைப்பில் கிடைக்கும் செல்வத்தை இறைவழியில் செலவு செய்வது எளிதான விஷயமல்ல என்பது ஓர் வலுவான உண்மையாகும். இறைவன் அதற்காக உள்ளத்தைத் திறந்து மன அமைதியை வழங்காத வரை இந்த மைதானத்தில் கால்பதிப்பதென்பது சாதாரண விஷயமல்ல. இதன் காரணமாகவே இன்று உலகில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தில் உள்ளது போல் வேறு எந்த முஸ்லிம் ஜமாஅத்துகளிலும் முறையான, நிரந்தரமான, தொடர்ச்சியான பொருள் தியாகங்களின் அமைப்பு காணப்படுவதில்லை.

இது அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் மீதுள்ள அல்லாஹ்வின் மாபெரும் அருளாகும். அவன் அஹ்மதிகளுக்கு பொருள் தியாகத்தின் ஆர்வத்தை எந்தளவுக்கு ஏற்படுத்தினான் என்றால், அவர்கள் முழுமை யான திருப்தியுடன், திறந்த மனதுடன் நற்செயல்களின் மைதானங்களில் இறங்குகின்றார்கள். முஃமின்களுக்கே உரித்தான வியப்பான முன்மாதிரியை எவ்வாறு முன்வைக்கின்றார்கள் என்றால் உலக செல்வங்களை நேசிப்பவர்களால் அதை நினைத்து கூட பார்க்க முடியாது. உலக சுகபோகங்கள் மிகைத்துள்ள இக்காலகட்டத்தில் இவ்வாறு தியாகங்கள் செய்யப்படுவதை அஹ்மதிய்யத்தின் உலகில் மட்டும்தான் காணமுடியும். இதுவே மகத்தான உணர்வும் பின்பற்றத்தக்க முன்மாதிரியுமாகும். இதை அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் உலகிற்கு வழங்கியுள்ளது.

அஹ்மதிகள் முன்னோர்களான சஹாபா பெருமக்களின் முன்மாதிரிகளை உயிர்ப்பித்துள்ளார்கள் என்பதே உண்மை. ஹஸ்ரத் மௌலானா நூருத்தீன் (ரலி) அவர்கள் தனது அனைத்து செல்வங்களையும் வழங்கி, சித்தீகிய்யத் என்ற தன்மையின் முன்மாதிரிக்கு உயிரூட்டினார்கள். டாக்டர் கலீஃபா ரஷீதுத்தீன் (ரலி) அவர்கள் பொருள் தியாகத்தில் எந்தளவுக்கு முன்னணி வகித்தார்கள் என்றால் ஹஸ்ரத் வாக்களிக்கப் பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் அன்னாருக்கு, இனி நீங்கள் தியாகம் செய்ய தேவையற்ற அளவுக்கு ஜமாஅத்திற்கு பொருள் தியாகம் செய்துள்ளீர்கள் என





எழுத்துப் பூர்வமான பாராட்டை வழங்கினார்கள். *(அல்ஃபஸ்ல் காதியான், 11, ஜனவரி 1927)*

மியான் ஷாதீ கான் ஸியால்கோட்டி (ரலி) அவர்கள் தனது வீட்டிலுள்ள அனைத்து பொருட்களையும் விற்று முழு தொகையையும் சந்தாவாக செலுத்தி விட்டார்கள். ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள், நீங்கள் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களை போன்ற முன்மாதிரியைக் காண்பித்துள்ளீர்கள் எனக் கூறினார்கள். இதனைக் கேட்ட மியான் ஷாதீ கான் (ரலி) அவர்கள் வீட்டிற்கு வந்து அங்கே காணப்பட்ட கட்டில்களையும் விற்று அனைத்து தொகையையும் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களிடம் ஒப்படைத்து விட்டார்கள். *(மக்தூபாத்தே அஹ்மதிய்யா. பாகம் 5, எண் 5, பக்கம் 142,143 மற்றும் அல்ஃபஸ்ல் காதியான். 26, ஜனவரி 1920.)*

பாபு ஃபகீர் அலி (ரலி) அவர்களிடம் சந்தா வாங்குபவர் சென்ற போது பணமாக எதுவும் அவர்கள் வசம் இருக்கவில்லை. சிறிது மாவு இருந்தது. அதை சந்தாவாக செலுத்திவிட்டு இரவு பசியுடன் உறங்கினார்கள். ஒரு அஹ்மதி ஒரு கோடி ரூபாயை அமைதியாக காலத்தின் கலீஃபாவிடம் கொடுத்து இதைப்பற்றி யாரிடமும் தெரிவிக்க வேண்டாம் என வேண்டிக் கொண்டவாறு ஜமாஅத்தின் நற்சேவைகளுக்காக தாங்கள் விரும்பும் வண்ணம் இதனை பயன்படுத்திக் கொள்ளுங்கள் என்று கூறினார். இவ்வறு பொருள் தியாகம் செய்து அதில் தனது பெயர் முகவரியை தவிர்ப்பவர்களும் உள்ளனர். செல்வந்தர்கள் இவையனைத்தும் இறைவனால் வழங்கப்பட்டவையாகும் அவனது வழியில் வழங்க வாய்ப்பு கிடைக்கப் பெற்றால் அதுவும் இறைவனது அருளாகும் என்ற உணர்வுடன் இலட்சங்களையும் கோடிகளையும் வழங்குகின்றனர். ஏழைகளும் இம்மைதானத்தில் எவ்விதத்திலும் பின் தங்கியவர்களாக இல்லை. குழந்தைகளின் தேவைகளை கிடப்பில் போட்டவாறு பசி, பட்டினியிலும் பைசா, பைசாவாக சேர்த்து வைத்து சந்தாவாக செலுத்தும் உதாரணங்காளால் அஹ்மதிய்யத்தின் வரலாறு நிரம்பி காணப்படுகிறது.

ஆண்கள் பெண்களை முந்திச் செல்லும் முயற்சியிலும் பெண்கள் ஆண்களை தோல்வியுறச் செய்யவும் காத்திருக்கின்றனர். பள்ளிவாயில் கட்டுவதற்கான வேளை வரும் போது ஆண்கள்

எந்தளவுக்கு தனது பாக்கெட்டுகளை காலி செய்கிறார்களோ, அதே அளவுக்கு பெண்களும் தங்களது தங்க ஆபரணங்களை ஒரு பைசா மதிப்பு கூட இல்லாத பொருளைப் போன்று அந்த மதிப்புமிக்க ஆபரணங்களை போட்டு விடுகிறார்கள். இலண்டனின் ஃபஸ்ல் பள்ளிவாயிலாகட்டும், பைத்துல் ஃபுதூஹ் பள்ளிவாயிலாகட்டும் பைத்துல் இஸ்லாம் பள்ளிவாயிலாகட்டும், பைத்துர் ரஹ்மான் பள்ளிவாயிலாகட்டும் உலகின் எந்த ஒரு பள்ளிவாயில் கட்டும் சந்தர்ப்பமாகட்டும் பெண்கள் சார்பாக ஆபரணங்களின் அடைமழை பொழியத் துவங்கிவிடுகிறது.

காதியானைச் சேர்ந்த ஒரு தர்வேஷின் நேசத்தைத் தூண்டும் வகையான தியாகம் எவ்வாறனது என்றால் அது ஆன்மாவில் ஒரு வித நெகிழ்ச்சியை ஏற்படுத்தி விடுகிறது. ஷம்சுத்தீன் தர்வேஷ் (ரலி) அவர்கள் உடல்ரீதியாக ஓர் ஊனமுற்றவர். நாள் முழுவதும் ஒரு சிறிய அறை வடிவிலான வீட்டில் காணப்படுவார். 1905 இல் உயில் (வஸிய்யத்) திட்டம் துவங்கப்பட்டது. 1919 இல் இவர் இத்திட்டத்தில் இணைந்தார். ஆனால் இவரோ நடக்க முடியாத ஓர் ஊனமுற்றவராக இருந்தும் இவரது பரந்த மனப்பான்மையையும் விசுவாசத்தின் முன்மாதிரியையும் பாருங்கள். 1919 இல் இருந்து இவர் வஸிய்யத் சந்தா வழங்கினார். தனது வாழ்நாள் முழுவதும் வழங்கியதோடு நிற்கவில்லை; மாறாக வரவிருந்த வருடங்களுக் காகவும் அதாவது 1990 ஆம் ஆண்டு வரை வஸிய்யத் சந்தாவை செலுத்தி விட்டார். ஆனால் இவரது மரணமோ ‘1950’ இல் நிகழ்ந்தது. அதாவது ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களது தோற்றத்தின் வேளையிலுள்ள ஆரம்பகால அஹ்மதி களுடன் இணைந்தவ னாகி ‘1990’ ஆம் ஆண்டு வரை வாழ்க்கையைப் பெற்றிருந்தால் இஸ்லாத்திற்கு அதுவரை சேவையாற்றிருப்பேன் என்பதை அவர் உவமை ரீதியாக சொல்லிவிட்டுச் சென்றிருக் கின்றார். நடக்க முடியாத, தனது நிலையை போலும் சீரமைக்க இயலாத, திக்குவாயுற்ற ஓர் ஊனமுற்ற மனிதரின் ஒப்பற்ற தியாக உணர்வாகும் இது. ஆனால் இந்த விசுவாசியின் உள்ளத்திலோ தியாகம் செய்யும் ஆர்வமும் உணர்வும் நிரம்பிக் காணப்பட்டது. *(சவுத்ரி ஃபய்ஸ் அஹ்மது குஜராத்தி எழுதிய ஒ பூல் ஜோ முர்ஜா கயே என்ற நூல் பாகம் 1, பக்கம் 60-62)*





காதியானில் ஆரம்ப காலகட்டத்தில் நடந்த ஒரு சம்பவம். இரண்டாவது கிலாஃபத்தின் போது ஓர் ஏழைப் பெண்மணியின் தியாக சம்பவத்தை எனது தாயார் பல முறை கூறியுள்ளார். ஹஸ்ரத் இரண்டாவது கலீஃபத்துல் மஸீஹ் (ரலி) அவர்கள் பொருள் தியாகத்தின் திட்டத்தை முன்வைத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது இந்த ஏழைப் பெண்மணி, செல்வந்தர்கள் தியாகங்களை செய்து விடுகிறார்கள். நான் மட்டும் இதிலிருந்து ஏன் பாக்கியமற்றவளாக இருக்க வேண்டும் என்று சிந்தித்தவாறு அமைதியிழந்து அங்கிருந்து வீடு வந்து சேர்ந்தார். வீட்டிலுள்ள பொருட்களை ஏற்கனவே விற்று சந்தாவாக செலுத்தி விட்டிருந்தார். முற்றத்தில் காணப்பட்ட கோழியைப் பிடித்து அவர்களின் முன்னே சந்தாவாக வைத்து விட்டார். பின்பும் திருப்தி ஏற்படாதவாறு வீடு சென்று சில முட்டைகளை மீண்டும் எடுத்து வந்தார். தியாக உணர்வு எந்தளவுக்கு மேலோங்கியிருந்தது என்றால், மன அமைதியுடன் இருக்க முடியாமல் தவித்தார். அங்கே இரண்டாவது கலீஃபத்துல் மஸீஹ் அவர்களின் உரைகள் தொடர்ந்து கொண்டிருந்தது. அவர் வீடு வந்ததும் மேலும் கொடுப்பதற்கு ஏதாவது கிடைக்காதா என்று அங்கும் இங்கும் நோட்டமிட்டார். ஓர் உடைந்த கட்டிலின் மீது அமர்ந்திருந்த அவரது கணவர், இப்போது என்ன தேடுகிறாய்? வீட்டில் தான் ஒன்றையும் நீ விட்டுவைக் கவில்லையே எனக் கூறினார். அப்போது தன்னிடமுள்ள அனைத்தையும் இறை வழியில் தியாகம் செய்வது என்ற தீர்மானத்திலிருந்த அந்த இறையடிமைப் பெண் கோபமாக, பேசாமல் இருங்கள். என்னால் முடிந்தால் உங்களையே விற்று சந்தாவாக செலுத்தி விடுவேன் என்று கூறினார்.

இதுவே அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்திலுள்ள ஒவ்வோர் ஆண், பெண்ணின் உண்மையான துடிப்பும் தனிச்சிறப்புமாகும். இதுதான் அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கிய தியாக உணர்வின் முன்மாதிரியாகும்.

### சந்ததிகளை தியாகம் செய்தல்

சந்ததிகளை இறைவழியில் தியாகம் செய்வதென்பது அத்தனை எளிதான விஷயமல்ல. இதன் மகத்துவத்தையும் உண்மைத்து வத்தையும் இந்த வழியில் கடந்தவர்களால் மட்டுமே அறிய முடியும். ஒரு தாய்க்கு தனது உடலின் சதையான சந்ததியை மரணத்தின் வாயை

நோக்கி செல்ல பயமின்றி அனுப்புவதென்பதை விட மேலான ஒரு தியாகம் இருக்க முடியாது. அஹ்மதி தாய்மார்கள் இந்த மைதானத்திலும் எவ்வாறான முன்மாதிரியை முன்வைத்துள்ளார்கள் என்பதற்கு அஹ்மதிய்யத்தின் வரலாறு சாட்சியாகும். உலகின் வரலாற்றிற்கோ இவற்றைப் பற்றிய எந்த அறிவும் இல்லை. ஒன்றோ இரண்டோ அல்லது மூன்றோயில்லை. மாறாக நான்கிற்கு நான்கு மகன்களையும் இறைவழியில் அர்ப்பணித்த தாய்மார்களும் இருக்கிறார்கள். தனது உலகமான ஒரே மகனையும் இறைவழியில் அர்ப்பணித்த தாய்மார்களும் இருக்கிறார்கள். அதுவும் அழுதவாறில்லை. சிரித்தவாறும் புன்னகை பூத்தவாறும் இறை சந்நிதியில் தலைதாழ்த்தி நன்றி செலுத்தியவாறும் அர்ப்பணிக்கின்றார்கள். பாகிஸ்தானிலுள்ள குஜ்ரான்வாலா என்ற ஊரைச் சேர்ந்த தைரியமிக்க அந்தத் தாயை வரலாற்றில் எவ்வாறு மறக்க முடியும்! அவர் தனது குழந்தைகளை வியப்புறும் விதத்தில் இறைவழியில் உயிர்தியாகம் செய்யப்படுவதற்காக முன் நிறுத்தினார். இன்று ஷஹாதத்தின் (உயித்தியாகத்தின்) வேளை வரலாம் எனக் கணிக்கப்பட்ட நாளில் சிங்கத்தைப் போன்ற வீரமனம் படைத்த இந்தத் தாய் பயத்தில் நடுங்கி அமைதியாகி அழுவதற்கு பதிலாக தனது சந்ததிகளை நீராட்டி தூய ஆடைகளை அணிவித்து ஒரு வேளை ஷஹாதத்தின் (உயிர்தியாகத்தின்) வேளை வந்தால் இந்த அழகிய குற்றமற்ற குழந்தைகள் முஃமின் களுக்கே உரித்தான கம்பீரத்துடன் அலங்கரிக்கப்பட்டவாறு தமது எஜமானின் சந்நிதியில் ஆஜராகட்டும் என்பதில் தீவிரமாக இருந்தார்.

இரண்டாவது கிலாஃபத்தின் காலகட்டத்தில் ஒரு சந்தர்ப்பத்தில் தாய்நாடான பாகிஸ்தானின் பாதுகாப்பிற்காக இளைஞர்களின் தேவை ஏற்பட்டது. ஹஸ்ரத் இரண்டாவது கலீஃபத்துல் மஸீஹ் (ரலி) அவர்கள் அஹ்மதி இளைஞர்களை பாகிஸ்தான் இராணுவத்தில் சேருமாறு அறிவுறுத்தினார்கள். சூழ்நிலை எப்படியிருந்ததென்றால் அந்நாட்களில் இராணுவத்தில் இணைவதென்பது தன்னைத் தானே மரணக் குழியில் தள்ளும் விஷயமாக இருந்தது. இந்த தூது ஒரு இடத்தை சென்றடைந்த போது அங்கு உடனே மயான அமைதி நிலவத் துவங்கிவிட்டது. எந்த ஒரு இளைஞனும் பெயர் எழுத முன்வரவில்லை. அங்கு ஒரு விதவைப் பெண்மணி அமர்ந்திருந்தார். வேறு சந்ததிக்கான எந்த வழியுமற்ற அவருக்கு ஒரேயொரு மகன் மட்டும்தான் இருந்தார். காலத்தின் கலீஃபாவின் அறிவிப்பைக்





கேட்டதும் படபடப்புடன் எழுந்த அந்த இறையடிமைப்பெண் இறைவன் மற்றும் அவனது ரஸூலின் பெயரில் தியாகத்தின் திட்டம் காலத்தின் கலீஃபாவின் சார்பாக வெளியிடப்பட்டுள்ளது. ஆனால் இதற்கு பதில் மௌனமா? எனக் கூறிய இந்த பெண்சிங்கம் தனது மகனை அழைத்தவாறு, 'என் மகனே! நீ பேசாமல் ஏன் நிற்கிறாய். காலத்தின் கலீஃபா அஹ்மதி இளைஞர்களை அழைத்துள்ளதை நீ கேட்கவில்லையா என்ன? எனக் கேட்டார். உடனே அந்த நற்பேறு பெற்ற மகன் தனது பெயரை முன் வைத்தான். முழு உலகத்திலும் இது போன்ற தாய்மார்களை, மார்க்கத்திற்காக தனது உயிரிலும் மேலான தனது சந்ததிகளை இவ்வாறு அர்ப்பணிப்பவர்களை எவராவது எங்களுக்கு காண்பிக்க முடியுமா? இந்த சிறப்பு, அஹ்மதி தாய்மார்களுக்கு மட்டுமே உள்ளது. அவர்கள் மார்க்கத்திற்காக தனக்குரிய அனைத்தையும் இறைவழியில் அர்ப்பணித்து விடுவது என்ற உண்மையான உறுதி மொழியை எடுத்துக் கொண்டவாறு அதற்கான வேளை வரும் போது அந்த உறுதி மொழியை உண்மையாக்கிக் காட்டுகின்றனர். இறை நேச உணர்வுடன் தனது ஒரே மகனை தியாகம் செய்ய முன்வந்த இந்த விதவைப் பெண்மணியைப் பற்றிய சம்பவத்தைக் கேட்டதும் ஹஸ்ரத் இரண்டாவது கலீஃபதுல் மஸீஹ் (ரலி) அவர்கள் இவ்வாறு துஆ செய்தார்கள்:

''என் இறைவா! இந்த விதவைப் பெண்மணி தனது ஒரே மகனை உனது மார்க்கத்தின் சேவைக்காகவோ அல்லது முஸ்லிம்களின் நாட்டின் பாதுகாப்பிற்காகவோ தியாகம் செய்ய முன்வந்துள்ளார். என் இறைவா! இந்த விதவைப் பெண்மணியை விட அதிகமாக தியாகம் செய்ய நான் கடமைப்பட்டுள்ளேன். நானும் உன்னிடம் உனது மகத்துவத்தின் வாயிலாக துஆ செய்கிறேன். என் இறைவா! ஒரு வேளை மனித தியாகம் தேவைப்பட்டால் இவரது மகனிற்கு பதிலாக எனது மகனை உயிர்த்தியாகியாக்குவாயாக.'' *(தாரீக் லஜ்னா இமாயில்லா, பாகம் 2, பக்கம் 114. முதற்பதிப்பு, வெளியீடு 1972.)*

## தியாகங்களின் பரந்த மைதானம்

அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் முழு உலகிலும் மாபெரும் ஆன்மீகப் புரட்சியை ஏற்படுத்திய ஓர் உலகளாவிய அமைப்பாகும். மனிதயின சீர்திருத்த மேம்பாட்டிற்கான திட்டங்கள் ஏற்படுத்தப்படும்போதெல்லாம் ஜமாஅத்திற்கு தியாகங்களின் நீண்ட

பொறுமை மற்றும் சோதனைகளின் வழிகளை கடக்க நேர்கிறது என்பதற்கு வரலாறு சாட்சியாகும். நமது எஜமானர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மற்றும் அவர்களின் பற்றுமிக்க சஹாபாக்கள் இக்களத்தில் விட்டுச் சென்றுள்ள அதே உயர்ந்த முன்மாதிரிகளை இறையருளால் இக்கால கட்டத்தில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் மீண்டும் உயிர்ப்பித்துள்ளது.

தியாகத்தின் மைதானத்தில் அனைத்தையும் விட மிகச்சிறந்த தியாகம் உயிர்தியாகமாகும். வாழ்க்கை எனும் செல்வம் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு முறைதான் கிடைக்கப் பெறுகிறது.இது அவனது மிக மிக நேசத்திற்குரிய ஒன்றாகும். இதை தியாகம் செய்வதென்பது ஒருவகையில் தியாகங்களின் மிஃராஜ் (உயர்படித்தரம்) ஆகும். இந்த மைதானத்திலும் ஜமாஅத் சஹாபா பெரு மக்களின் உயர் முன்மாதிரிகளை உயிர்ப்பித்துக் காண்பித்தவாறு செயல்ரீதியாகவும் ஆகரீன்களின் காலகட்டத்தில் சஹாபாக்களை பின்பற்றும் ஜமாஅத் என்ற தனித்துவம் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்திற்கு உண்டு.

உயிர்தியாகத்தைப் பற்றிய பேச்சு வந்ததுமே முதலில் ஹஸ்ரத் மியான் அப்துர்ரஹ்மான் (ரலி) அவர்களின் பெயர்தான் நினைவுக்கு வருகிறது. அஹ்மதிய்யத்தை ஏற்றுக் கொண்டதன் விளைவாக துணி மூலம் அவரது கழுத்தை நெரித்து மிகக் கொடூரமாக ஆப்கானிஸ்தானில் அவர்கள் ஷஹீதாக்கப்பட்டார்கள். அன்னார் அஹ்மதிய்யத் தின் முதல் உயிர்தியாகி என்ற சிறப்பை பெற்றார்கள். இதன் பிறகு ஹஸ்ரத் சாஹிப் ஸாதா சய்யத் அப்துல் லத்தீஃப் (ரலி) அவர்கள் அசாதாரணமான ஈமான் உறுதியுடனும் கம்பீரத்துடனும் உயிர்தியாகம் செய்தார்கள். ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் இவ்விரு மகான்களின் உயிர் தியாகங்களின் விபரத்தை தனது கைப்பட இவ்வாறு எழுதியுள்ளார்கள்:

'' அப்துல் லத்தீஃபே! உம் மீது ஆயிரமாயிரம் அருட்கள். நீர் வாழ்நாளிலேயே உனது உண்மைத்துவத்திற்கான முன் மாதிரியை காண்பித்துவிட்டீர்.'' *(ருஹானி கஸாயின் இலண்டன் பதிப்பு 1984, பாகம் 20 தஸ்கிரத்துஷ் ஷஹாததைன் பக்கம் 60)*

ஹஸ்ரத் சாஹிப்ஸாதா அப்துல் லத்தீஃப் ஷஹீத் (ரலி) அவர்கள் ஞானம் மற்றும் அறிவாற்றலின் காரணமாக காபூல் மண்ணின் தலைவராகத் திகழ்ந்தார்கள். அவர்களுக்கு ஆயிரக்கணக்கான சீடர்கள் இருந்தனர். அன்னார் அரசாங்கத்தின் வலது கரமாகவும் காபூல்





ஆலிம்களின் சூரியனாகவும் விளங்கினார்கள். ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் வாதம் உண்மையெனத் தெரிந்ததும் ஏற்றுக் கொண்டார்கள். பிறகு ஆப்கானிஸ்தான் திரும்பச் சென்றடைந்ததும் இக்குற்றத்தின் (நஊது பில்லாஹ்) காரணமாக அன்னார் கைது செய்யப்பட்டார்கள். நான்கு மாத சிறைக் கொடுமைகளை தாங்கிக் கொண்டார்கள். சிறையில் 64 கிலோ எடையுள்ள சங்கிலியால் பிணைக்கப்பட்டார்கள். கால்களில் 8 கிலோ எடையுள்ள கடிவாளம் போடப்பட்டது. பல இலட்சங்களுக்கான நில புலன்களின் அதிபதியாக செல்வச் செழிப்பில் வாழ்ந்த அவர்கள் இவ்வாறான துன்பங்களை மிகவும் மன உறுதியுடன் தாங்கிக் கொண்டார்கள். மன்னரோ அஹ்மதிய்யத்தை விட்டுவிடுமாறு மீண்டும் மீண்டும் அன்னாரை வற்புறுத்தினார். அவ்வாறு விட்டு விட்டால் கண்ணியத்துடன் விடுதலை யளிப்பதாகவும், பொன் பொருள் போன்றவற்றை அளிப்பதாகவும் வாக்குறுதியளித்தார். ஆனால் எவ்வித பேராசையாலும் வாக்குறுதியாலும் அன்னாரை தன்மன உறுதியிலிருந்து சிறிதும் பின்வாங்க வைக்க முடியவில்லை. ஒவ்வொரு முறையும் அன்னாரது பதில் இதுவாகவே இருந்தது:

''நான் மார்க்கத்தைவிட உலகிற்கு முக்கியத்துவம் வழங்குவேன் என்ற நம்பிக்கையை என் மீது வைக்காதீர்கள். எவரை நான் தெளிவாக அடையாளம் கண்டு அனைத்து விதத்திலும் உறுதிப்படுத்தி விட்டேனோ அவரை எனது மரண பயத்தின் காரணமாக எவ்வாறு மறுக்க முடியும்? இந்த மறுப்பு என்னால் சாத்தியமானதல்ல. நான் உண்மையை அடைந்து விட்டேன் என்பதை பார்க்கிறேன். எனவே சிலநாள் வாழ்க்கைக்காக என்னால் நிரூபிக்கப்பட்ட இந்த உண்மையை விட்டு விட்டு ஈமானுக்கு விரோதமான செயலை செய்ய முடியாது. நான் உயிரை விடுவதென தீர்மானித்து அதற்காக தயாராகவும் உள்ளேன். ஆனால் உண்மை என்னுடன்தான் செல்லும்.'' *(ருஹானி கஸாயின் இலண்டன் பதிப்பு 1984, பாகம் 20, தஸ்கிரத்துஷ் ஷஹாததைன் பக்கம். 52)*

இறுதியில் இன்றிலிருந்து சரியாக 100 ஆண்டுகளுக்கு முன் 14, ஜூலை, 1903 என்ற அந்த நாளும் வந்தது. அன்று அந்த மகானின் மீது குஃப்ர் ஃபத்வா (மார்க்கத்திலிருந்து வெளியேறியவர் என்ற மார்க்க தீர்ப்பு!) சுமத்தப்பட்டு மூக்கில் துளையிட்டு கயிற்றால் கட்டி ஒரு விலங்கைப் போல் வீதியில் கொலை செய்யப்படும் இடத்திற்கு இழுத்து வரப்பட்டார்கள். எப்படிப்பட்ட கோரக் காட்சியென்றால்

அக்கிரமக்காரர்கள் இந்த அப்பாவி மனிதரின் மீது அனைத்து திசைகளிலிருந்தும் கெட்ட வார்த்தைகளையும் சாபங்களையும் பொழிந்த வண்ணமிருந்தனர். ஆனால் அந்நேரம் வானத்திலிருந்து வானவர்களோ இந்த மாமனிதனின் உறுதியையும் மகத்துவத்தையும் போற்றி புகழ்ந்து கொண்டிருந்தனர். எவ்வித பேராசைக்கும் பயத்திற்கும் வளைந்து கொடுக்காமல் சீரான மலையைப் போல் நிலைத்து நின்றார்கள். அக்கிரமக்காரர்கள் இந்த அப்பாவி மனிதரை இடுப்புவரை மண்ணில் புதைத்து பின்பு அனைத்து திசைகளிலிருந்தும் கல்மாரி பொழியத் துவங்கினார்கள். பார்த்துக் கொண்டிருக்கும் போதே இந்த தூய மனிதர் கற்குவியலில் மூழ்கி பார்வைகளிலிருந்து மறைந்து விட்டார்கள். ஷஹீத் மர்ஹூம் அவர்கள் உயிர்தியாகம் எனும் அமிர்தத்தைப் பருகி நிரந்தர வாழ்வைப் பெற்று விட்டார்கள். தனது உயிரை வழங்கி தைரியத்திற்கும் உறுதிக்கும் எவ்வாறான ஓர் உதாரணத்தை நிலைநாட்டி விட்டார்களென்றால் வரவிருப்பவர்களுக்கு எவ்வாறு ஈமான், உண்மை மற்றும் உண்மைத்துவத்திற்காக உயிர்களை காணிக்கை செலுத்த வேண்டும் என்பதற்கு இது ஓர் உயர் முன்மாதிரியாகும்.

ஷஹீத் மர்ஹூம் அவர்கள் வெளிப்படுத்திய இந்த உருக்கமான உயிர்தியாகத்தை அஹ்மதிய்யத்தின் வரலாறு ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒளிரவைத்துக் கொண்டே செல்லும். இன்று வரை 210 க்கும் அதிகமான தூய மனிதர்கள் இந்தவழியில் உயிர்தியாகம் எனும் அமிர்தத்தை பருகியுள்ளனர். அஹ்மதிய்ய வானின் நட்சத்திரங்களான நற்பேறு பெற்ற இவர்கள் தங்களது தூய இரத்தத்தினால், அஹ்மதிய்யத்தின் உண்மைத்துவத்திற்கான முத்திரையை பதித்து நிரந்தர வாழ்க்கையின் வாரிசுகளாகிவிட்டனர்.

உயிர்த்தியாகத்தின் உயர்பதவிகளைப் பெற்றவர்களுடன் இணைந்தவாறு இறைவழியில் சிறைச்சாலை செல்பவர்களும் அதிகம் இருக்கின்றனர். இந்த சிறைவாசிகளின் உறுதி ஓர் அற்புதமும் அஹ்மதிய்யத்தின் உண்மைத்துவத்திற்கான மாபெரும் அடையாளமும் ஒளிமிக்க ஆதாரமுமாகும். இந்த அப்பாவிகள் மிகக் கொடுமையாக துன்பத்திற்குள்ளாக்கப்படுகின்றனர். ஆனால் இந்த இறையடியார்கள் இறை வழியில் தங்களுக்கு கிடைக்கப்பெற்ற இந்த விலங்குகளை முத்தமிடுகின்றனர். இறை வழியில் அநீதியிழைக்கப்படும் போது பொறுமையையும், உறுதியையும்,





புன்சிரிப்பையும் காண்பிக்கும் இவர்களை அஹ்மதிய்யத்தைத் தவிர உலகில் வேறெங்கும் காண இயலாது.

## இஸ்லாத்தைப் பரப்பும் உணர்வும், தியாகங்களும்

ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் ஒரு சஹாபி மௌலவி ஃபதஹ்தீன் தரம் கோட்டி (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். நான் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களுடன் பெரும்பாலும் இருப்பேன். பல வேளைகளில் அவர்களுடன் இரவிலும் தங்கியுள்ளேன். ஒருமுறை நடு இரவில் ஹஸ்ரத் வாக்களிப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் அமைதியின்றி பரபரப்புடன் காணப்பட்டார்கள். தாகத்தில் தண்ணீர் தவிப்பவரைப் போன்றும் ஒரு நோயாளி வலியில் துடிப்பதைப் போன்றும் ஒரு மூலையிலிருந்து மறு மூலைக்கு நிம்மதியிழந்த வாறு உலாவிக் கொண்டிருந்தார்கள். நான் இந்நிலையைக் கண்டு மிகவும் பயந்து அமைதியின்றியே கவலையுடன் படுத்திருந்தேன். எதுவரையென்றால் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் இந்த நிலைமை மாறியது. காலையில் ஹுஸூர் அவர்களிடம் இரவில் எனது கண்கள் இவ்வாறான காட்சியைக் கண்டது. தாங்களுக்கு ஏதேனும் கஷ்டமா அல்லது உடல் ரீதியான வலி ஏற்பட்டதா எனக் கேட்டேன். அப்போது ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் கூறினார்கள் :

'' மியான் ஃபதஹ்தீன்! அந்த நேரம் நீங்கள் விழித்திருந்தீர்களா என்ன? உண்மை விஷயம் என்னவென்றால், எனக்கு இஸ்லாத்திற்காக செய்ய வேண்டிய பணிகள் மற்றும் இப்போது இஸ்லாத்தின் மீது வருகின்ற அனைத்து கஷ்டங்களும் எனக்கு நினைவுக்கு வந்ததும் எனது உடல்நிலை மிகக்கடுமையாக அமைதியிழந்து விடுகிறது. என்னை இவ்வாறு அமைதியிழைக்க வைப்பது இஸ்லாத்தின் மீதுள்ள இந்த வேதனையாகும்.'' (சீரதுல் மஹ்தி, காதியான் வெளியீடு 1939, பகுதி 3, பக்கம் 29)

தனது வாழ்நாளின் ஒவ்வொரு தருணத்திலும் இவ்வழியில் தியாகம் செய்த இந்த அருளுக்குரிய மகானின் நிலைதான் இது. இரவையும் பகலையும் இஸ்லாத்தின் சேவைக்காக கழித்திருந்தும் இரவு நிம்மதியின்றியே அவர்களுக்கு கழிந்தது. அன்னார் கூறுகிறார்கள் :

''நம்மால் சாத்தியாமானதாயின் நாம் பிச்சைக்காரர்களைப் போல் வீடுவீடாகச் சென்று இறைவனின் உண்மையான மார்க்கத்தைப் பரப்பி உலகில் பரவியுள்ள அழிவை ஏற்படுத்தும் இந்த இணைவைத்தல் மற்றும் நிராகரிப்பிலிருந்து மக்களை காப்பாற்றிட வேண்டும். இறைவன் நமக்கு ஆங்கில மொழியை கற்பித்திருந்தால் நாமே சுற்றித்திரிந்து பிரச்சாரம் செய்வோம். இவ்வழியில் கொலை செய்யப்பட்டாலும் சரியே, இதே பிரச்சாரத்தில் வாழ்வை முடித்துக் கொள்வோம்.'' (மல்ஃபூஸாத், இலண்டன் வெளியீடு 1984, பாகம் 3, பக்கம் 291, 292)

அன்னாரது முழு வாழ்வும் இந்த உணர்விற்கேற்றவாறே கழிந்தது. அன்னார் இஸ்லாமிய சேவையின் அனைத்து வழியிலும் காலெடுத்து வைத்தார்கள். இஸ்லாமிய பிரச்சாரத்தின் அனைத்து வழிமுறைகளையும் மேற்கொண்டார்கள். இவையெல்லாவற்றிற்கும் மேலாக இதே உணர்வையும் துடிப்பையும் தனது ஜமாஅத்திற்குள்ளும் எவ்வாறு உருவாக்கினார்கள் என்றால் மார்க்க சேவையின் இந்த துடிப்பு ஜமாஅத்தின் அடையாளமாக மாறிவிட்டது. அஹ்ராரி இயக்கத்தின் சிந்தனையாளர் சவ்த்ரி அஃப்ஸல் ஹக் அவர்கள், அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் இஸ்லாத்தைப் பரப்பும் துடிப்பையும் பிரச்சாரப் பணிகளையும் பற்றி கீழ்கண்டவாறு எழுதுகிறார் :

''முஸ்லிம்களின் பிற பிரிவுகளில் உள்ள எந்த ஜமாஅத்தும் பிரச்சாரப் பணிகளுக்காக உருவாக முடியவில்லை. ஆயினும் ஓர் உள்ளம் முஸ்லிம்களின் பொறுப்பின்மையால் அமைதி யிழந்து எழுந்தது. தன்னுடன் ஒரு சிறிய ஜமாஅத்தை இணைத்துக் கொண்டு இஸ்லாத்தை பரப்புவதற்காக முன்னேறியது. தனது ஜமாஅத்தில் அது எத்தகைய பிரச்சாரத் துடிப்பை உருவாக்கிச் சென்றது என்றால், அது முஸ்லிம்களின் இதரப் பிரிவினர்களுக்கு மட்டுமல்லாது முழு உலகிலுமுள்ள பிரச்சார ஜமாஅத்துகளுக்கும் பின்பற்றதகுந்த ஒரு முன்மாதிரியாகும்.'' ***(சவுத்ரி அஃப்ஸல் ஹக் எழுதிய ஃபித்னா இர்திதாத் அவ்ர் பொலிடிகல் கலாபாஸியான் Co-operative steam press, wathan buildings Lahore வெளியீடு, பக்கம் 46)***

அந்நியர்களாலும் ஆமோதிக்கப்பட்ட இந்த பிரச்சாரத் துடிப்பு உண்மையில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் ஒப்பற்ற தனித்துவமாகும். அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் முழு உலகிலும்





செய்துவந்த விரிவான, துடிப்பான, நிலையான இயல்புடனும் வெற்றியுடனும் காணப்படும் இறையழைப்புப் பணியின் இந்த முன் மாதிரியை வேறு எங்கும் காண இயலாது. இஸ்லாத்தின் பிரச்சார உணர்வு இந்த ஜமாஅத்தின் இயல்போடு கலந்த ஒன்றாகும். மேலும் ஒவ்வொரு உள்ளத்திலும் இதன் துடிப்பும் தொடர்பும் காணப்படுகிறது. இது அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கிய ஈமானின் மகத்தான செல்வமாகும். மார்க்கச் சேவை மற்றும் இஸ்லாமிய பிரச்சாரத்தின் இவ்வகையான ஒப்பற்ற உணர்வுகளின் முன்மாதிரியை அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியுள்ளது.

முழு உலகிலும் இஸ்லாத்தின் பிரச்சாரத்தை மேற்கொள்வ தென்பது சிறுபிள்ளை விளையாட்டல்ல. இவ்வழியில் உயிர், பொருள், நேரம், கண்ணியம், நிம்மதி போன்ற அனைத்தையும் தியாகம் செய்ய வேண்டியுள்ளது. நற்பேறு பெற்ற இந்த அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்திற்கு இறைவன் எவ்வாறான தூய மனம் கொண்டவர் களை வழங்கியுள்ளா னென்றால் அவர்கள் இந்த அருளுக்குரிய வழியில் செல்வதற்கான உறுதி மொழியை எடுத்துக் கொண்டு துணிவுடன் முன்வந்து தனது வாழ்வை காலத்தின் கலீஃபாவின் முன் வைத்து விடுகிறார்கள். தமது வாழ்வை இறை வழியில் அர்ப்பணம் செய்யும் இந்த நற்பேறு பெற்ற கூட்டத்தினர் தனது மாசற்ற தியாகங்கள் மற்றும் முயற்சியால் குஃப்ர் (நிராகரிப்பு) எனும் இருளில் இஸ்லாம் எனும் விளக்கை ஏற்றி வைத்தனர். இஸ்லாத்தின் இவ்வீரர்கள் அனல்பறக்கும் வெயிலில் பசி, தாகத் துடன் ஊர் ஊராக நடந்து சென்று ஏக இறைவனின் தூதை எட்ட வைத்தனர். ஆப்பிரிக்க காடுகளில் மரங்களின் இலைகளை உண்டுகழித்தனர். எதிரிகளின் கைகளில் அடிவாங்கினர். கற்களி னாலும் வாளினாலும் காயமுற்றனர். மேலும், பல விதமான கொடுமைகளுக்கு ஆளாக்கப்பட்டனர். இருந்தும் பிரச்சாரம் எனும் கொடியை எல்லா நிலைகளிலும் உயரப் பிடித்துக் கொண்டனர். கடும் குளிருள்ள சிறைகளில் இவர்கள் அடைக்கப்பட்டு அவர்களின் முன் பன்றி இறைச்சி வைக்கப்பட்டது. மரணத்தை தவிர்ப்பதற்காக ரொட்டியின் சில துண்டுகளையும் தண்ணீரையும் உண்டு கழித்து அங்குமிங்கும் ஓடி அதிலேயே வாழ்வைக் கழித்தனர். உடலில் நடுக்கத்தை ஏற்படுத்தக்கூடிய துணிவுமிக்க சம்பவங்களும் உள்ளன. இவை யனைத்தும் நடந்தேறின. ஆனால் அஹ்மதிய்யத்தின் இந்த நற்பேறு பெற்ற மார்க்கப் போர் வீரர்கள்

அனைத்து நிலையிலும் இஸ்லாத்தின் முழக்கத்தை முழங்கிக் கொண்டேயிருந்தனர்.

நேசமும், நன்றியுணர்வும் உள்ள சம்பவங்கள் இத்துடன் முடிந்து விடவில்லை. இவர்களில் சிலர் திருமணம் முடிந்த பின் தன் இளம் மனைவியை விட்டு விட்டு வெளி நாடுகளுக்குச் சென்றனர். சில காலம் கழித்துத் திரும்பியதும் இளம் மனைவி கிழவியாகக் காட்சியளித்தார். சிலர் தனது சிறிய குழந்தைகளை விட்டு விட்டுச் சென்றனர். பல வருடங்களுக்குப் பின் நாடு திரும்பினர். அப்போது தங்களது குழந்தைகளை அவர்களாலேயே அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. ஆம்! இந்த மார்க்கப் போர் வீரர்களில் பற்றுள்ள இன்னும் சிலர் தமது வயது முதிர்ந்த தாய் தந்தையரை விட்டு விட்டு பிரச்சாரப் பணியை மேற்கொள்ளச் சென்றனர். பின்பு பெற்றோர்கள் இறந்து விட்ட செய்தியை வெளிநாடுகளில் தான் கேட்டறிந்தனர். சில பற்றுள்ள மார்க்கப் போர் வீரர்கள் இஸ்லாம் எனும் உயர்ந்த கலிமாவிற்காக முற்றும் துறந்து சென்றனர். பின்பு இறுதிவரை தாய்நாடு திரும்பி வர அவர்களால் இயலவில்லை. இதே மாபெரும் புனிதப் போரில் அவர்கள் தனது உயிரைக் காணிக்கையாக்கினர். இன்றும் அதே பூமிதான் அவர்களது இறுதி ஓய்விடமாக மாறியுள்ளது. உயிர்தியாகங்களின் இவ்வுண்மைச் சம்பவங் களையும் நேசமும் பற்றுமிக்கவர்களின் இந்த உயிருள்ள முன்மாதிரியையும் இக்காலத்தில் அஹ்மதிய்யத்தை தவிர வேறெங்கும் காண இயலாது.

உயிர்தியாகம், வீரமிக்கவர்களின் இச்சம்பவங்கள் இத்துடன் நின்று விடவில்லை. மாறாக தனது பணி ஓய்வுக்குப் பின் இறுதி மூச்சுவரை ஜமாஅத் சேவைகளில் தீவிரமாக செயல்படும் மார்க்க வீரர்களையும் அல்லாஹ் அஹ்மதிய்யத்திற்கு வழங்கியுள்ளான். ஆண்டாண்டுகளாக மருத்துவ மைதானத்தில் மனிதயினத்திற்கு சேவையாற்றும் மருத்துவர்களும் உள்ளனர். அறிவு எனும் ஒளியால் உலகை பிரகாசமாக்கிக் கொண்டிருக்கும் ஆசிரியர்களும் உள்ளனர். மேலும் இப்போது அல்லாஹ்வின் அருளால் வக்ஃபே நவ் திட்டத்தின் கீழ் வாழ்வை அர்ப்பணித்தவர்களின் ஒரு மாபெரும் படை இம்மைதானத்தில் இறங்கத் தயாராகி வருகிறது. இஸ்லாத்தின் நேசர்களாகிய இந்த இளம் பிஞ்சுக்கள் எவ்வாறானவர்களென்றால் இவர்களின் பெற்றோர்கள் தங்களின் பிள்ளைகளை அர்ப்பணித்து





மார்க்க சேவைக்காக ஜமாஅத்திடம் ஒப்படைத்து விட்டனர். 1987இல் காலத்தின் கலீஃபா அவர்கள் வக்ஃபே நவ் திட்டத்தில் அர்ப்பணிக்கப்படுபவர்கள் ஐந்தாயிரம் பேர் வேண்டுமென்று விருப்பம் தெரிவித்தார்கள். அஹ்மதி பெற்றோர்கள் மகிழ்ச்சியுடன் இத்திட்டத்திற்கு ஆதரவளித்தனர். இன்று (2003ம் ஆண்டு) இந்த மார்க்கப் போர் வீரர்களின் எண்ணிக்கை அல்லாஹ்வின் அருளால் 26,321 ஐ எட்டியுள்ளது.

இறைவழியில் வாழ்வை அர்ப்பணிக்கும் இத்தொடரையும் தொடரின் அமைப்பையும் அஹ்மதிய்யத் உலகிற்கு மாபெரும் அன்பளிப்பாக அளித்துள்ளது. இவ்வாறு தனது அனைத்தையும் கொடுத்து சுவர்க்கத்தைப் பெறும் எவரேனும் உலகில் உள்ளனரா என்பதைக் கூறுங்கள்?

## துஆ (வேண்டுதல்) ஏற்றுக்கொள்ளப் படுவதற்கான ஆதாரமும் அனுபவமும்

துஆ ஏற்றுக்கொள்ளப்படுவதென்பது இறைவனது இருப்பிற்கான ஓர் ஆதாரமும் முஃமின்களது ஈமானின் வலுவிற்கான ஒரு வழியுமாகும். நமது இறைவன் உயிருள்ள இறைவன். அவன் அடியார்களின் துஆக்களை செவியுற்று அவற்றிற்கு பதிலுமளிக்கின்றான். பின்பு துஆ ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான சுவையான கனிகளையும் வழங்குகிறான் என்ற நற்செய்தியை அஹ்மதிய்யத் உலக மக்களுக்கு வழங்கியது. எவ்வித மாற்றுக்கருத்திற்கும் இடமின்றி மகத்துவத்துடனும் உறுதியுடனும் இவ்விஷயத்தை அஹ்மதிய்யத் உலகத்தின் முன்வைத்தது. அதிகமாகவும் தொடர்ச்சியாகவும் அஹ்மதிய்யத்தின் உலகில் துஆ ஏற்றுக் கொள்ளப் படுவதற்கான உயிருள்ள அடையாளங்கள் எந்த அளவுக்கு வெளிப்பட்டுக் கொண்டிருக்கின்றன வென்றால் இதற்கு நிகரானதை முழு உலகிலும் வேறு எங்கும் காண முடியாது.

அஹ்மதிய்யத் மட்டுமே உலகிற்கு துஆ ஏற்றுக்கொள்ளப் படுவதற்கான உண்மையான ஞானத்தை வழங்கியது. மேலும் அவற்றின் புத்தம் புதிய வெளிப்பாடுகளின் எண்ணற்ற முன்மாதிரிகளை வழங்கியது. உண்மை என்ன வென்றால், இன்று உலகில் நேரடியாகவோ அல்லது பிறரின் மூலமாகவோ துஆ ஏற்றுக்கொள்ளப்படுவதைப் பார்க்காத அல்லது அனுபவம் பெறாத எந்த ஓர் அஹ்மதி குடும்பமும் இல்லை. துஆவின் மீது உறுதியான

நம்பிக்கையும் துஆ ஏற்றுக்கொள்ளப்படும் சொந்த அனுபவமும் ஓர் அஹ்மதியின் வாழ்வின் அங்கமாக மாறியுள்ளது. அல்லாஹ்வின் அருளால் ஒவ்வொரு அஹ்மதியும் இதனை நன்றாக அடையாளம் கண்டுள்ளனர். அஹ்மதிய்யத்தின் உலகில் நேசத்துடனும் ஆர்வத்துடனும் தொடர்ச்சியாக ஒவ்வொரு வீட்டிலும் துஆ மற்றும் அது ஏற்றுக் கொள்ளப்பட்டதைப் பற்றியும், அதனால் அடைந்த பயன்களையும் பற்றிய பேச்சு நடைபெற்றுக் கொண்டிருக்கும். முழு உலகத்திலும் ஒட்டு மொத்தமாகக் கூட இந்தளவுக்கு பேச்சு நடைபெறுவதில்லை. அஹ்மதிய்யா ஜமாஅத்தில் ஆண்கள் பெண்கள் மட்டுமின்றி சிறிய குழந்தைகளும் இதன் சுவையை அறிந்துள்ளனர். துஆவின் இந்த நிலையும், இதைப்பற்றிய ஞானமும் இந்த அளவிற்கு அனுபவமும் உலகில் வேறு எந்த ஜமாஅத்திற்கும் இவ்வண்ணம் கிடைக்கவில்லை.

துஆ என்பது என்ன? அதன் தாக்கங்கள் மற்றும் அருட்கள் யாவை என்பதைப்பற்றி ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் ஞானமிக்க வார்த்தைகளில் கேளுங்கள். அவர்கள் கூறுகின்றார்கள்:

'' (துஆவாகிய) அது (எதிரிகளை) அழித்து விடக்கூடியதாகும். அது உருக்கக்கூடிய நெருப்பாகும். அது அருளை ஈர்க்கும் காந்த விசையாகும். அது மரணமாகும். ஆனால் இறுதியில் உயிர் தருகின்றது. அது அடித்துச்செல்லும் வெள்ளமாகும். ஆனால் இறுதியில் அது கப்பலாக மாறிவிடுகிறது. ஒவ்வொரு சீர்குலைந்த விஷயமும் அதனால் சீராகும். மேலும் அனைத்து விஷமும் அதனால் இறுதியில் அதை முறிக்கும் மருந்தாகிவிடும்...... இவ்வாறு துஆ புழுதியைப் பொன்னாக்கும் ஓர் இரசாயனமாகும். அது அகத்தின் அசுத்தத்தை நீக்கும் ஒரு நீராகும். அந்த துஆவுடன் ஆன்மா உருகுகின்றது. மேலும் வெள்ளமாக பாய்ந்து ஏக இறைவனின் சந்நிதியில் விழுகிறது.'' ***(ரூஹானி கஸாயின் இலண்டன் வெளியீடு 1984, தொகுதி 20, லெக்சர் ஸியால் கோட் பக்கம் 20-21)***

ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ்(அலை) அவர்கள் மேலும் கூறுகிறார்கள்:

''துஆக்களின் தாக்கம் நீர், நெருப்பின் தாக்கத்தைவிட அதிகமானதாகும். மாறாக இயற்கை காரணிகளில் துஆவைப்போல்





மாபெரும் தாக்கத்தை கொண்டது வேறெதுவுமில்லை''. ***(ரூஹானி கஸாயின் இலண்டன் பதிப்பு 1984, பாகம் 6, பரக்காத்துத் துஆ பக்கம் 11)***

துஆ எற்றுக்கொள்ளப்படுவற்கான தூய வெளிப்பாடுகளின் தோற்றம் எந்தெந்த விதத்தில் நிகழ்கிறது? இது எவ்வாறான ஓர் ஆழ்கடலென்றால் இதன் ஆழத்தை ஒரு போதும் அளக்கவோ அல்லது இதைப்பற்றி முழுமையாகக் கூறவோ இயலாது. இது ஒவ்வொரு வேளையிலும் பரந்து விரிந்து கொண்டே செல்லும் ஒரு தொடராகும். அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் வரலாற்றில் துஆ ஏற்றுக் கொள்ளப்பட்ட சம்பவங்கள் வானின் நட்சத்திரங்களைப் போல் நிறைந்து காணப்படுகிறது. எவற்றைக் கூறுவது? இருப்பினும் ஒருசில உதாரணங்களைக் கூறுகிறேன். அவற்றின் மூலம் அல்லாஹ் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்திற்கு எவ்வாறான உயிரையும் வாழ்வையும் வியக்கும் அற்புதத்தையும் வழங்கியுள்ளான் என்பதை கணித்து விடலாம்.

ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் காலத்தில் முன்ஷி அதா முஹம்மது பட்வாரி அவர்களின் சம்பவம் மிகவும் புகழ் பெற்றது. அவருக்கு மூன்று மனைவியர் இருந்தனர். ஆனால் சந்ததிகள் இல்லை. மிர்ஸா சாஹிபின் துஆவினால் எனக்கு நான் விரும்பும் மனைவியின் மூலம் சந்ததி கிடைக்கப் பெற்றால் நான் அஹ்மதியாகி விடுவேன் என அவர் கூறினார். ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ்(அலை) அவர்கள் துஆ செய்தார்கள். அதன் அருளின் விளைவாக அவருக்கு தனது விருப்பத்திற்கேற்ப சந்ததியும், அஹ்மதிய்யத் எனும் செல்வமும் கிடைத்தது. ***(சீரத்துல் மஹ்தி, காதியான் வெளியீடு 1935, தொகுதி 1, பக்கம் 239-241)***

கபூர்தலாவில் அஹ்மதிகளின் பள்ளி வாயிலை அன்னியர்கள் அபகரித்துக் கொண்டனர். நீதிபதியோ அஹ்மதிகளுக்கு எதிராக தீர்ப்பை வெளியிட வேண்டும் என்பதில் தீவிரமாக இருந்தார். ஜமாஅத் தோழர்களின் பதற்றத்தைக் கண்டு ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் அவர்களுக்கு ஆறுதல் வழங்கியவாறு பதற்றமடையாதீர்கள்; நான் உண்மையாளனென்றால் இந்தப்பள்ளிவாயில் உங்களுக்கு கிடைத்தே தீரும் எனக் கூறினார்கள். முதல் நீதிபதி திடீரென மரணமடைந்து விட்டார். பின்பு வந்த புதிய நீதிபதி

அஹ்மதிகளுக்கு சாதகமான தீர்ப்பை வழங்கினார். *(சீரத்துல் மஹ்தி, காதியான் வெளியீடு 1935, தொகுதி 1, பக்கம் 64)*

மவ்லான ரஹ்மத் அலி (ரலி) அவர்களின் சம்பவமும் மிக பிரபலமானது. இந்தோனேஷியாவில் அவரது மர வீட்டின் அருகே நெருப்பு பற்றிக்கொண்டது. அவரது வீட்டையும் நெருப்பு எரித்து பொசுக்கிவிடும் அபாயம் இருந்தது. முஃமின்களுக்கே உரித்தான உறுதியுடன் அவர் அங்கேயே இருந்து கொண்டு துஆ செய்தவாறு இந்த நெருப்பால் எனக்கும் எனது வீட்டிற்கும் ஒருபோதும் இழப்பை ஏற்படுத்தமுடியாது. ஏனென்றால், 'நெருப்பால் எம்மை பயமுறுத்தாதீர்கள். நெருப்பு எமது அடிமை மட்டுமல்ல; அடிமைகளின் அடிமையுமாகும்' என்று இறைவனால் வாக்குறுதியளிக்கப்பட்ட அந்த மஸீஹின் மிக கீழ்நிலையில் உள்ள அடிமை நான் என மக்களிடம் கூறினார். இறைவனது அற்புதத்தைப் பாருங்கள். திடீரென மேகம் திரண்டு அடைமழை பெய்து நெருப்பை குளிர வைத்துவிட்டது. உண்மையிலேயே அந்த நெருப்பு காலத்தின் மஸீஹின், அடிமையின் அடிமையாகிவிட்டதை உலகம் பார்த்தது. *(ருஹ்பர்வர் யாதேன். மவ்லவி முஹம்மது ஸித்தீக் அம்ரித்ஸரி. பக்கம் 64, அல்ஃபஸ்ல் 9 டிசம்பர் 1938)*

ஹஸ்ரத் முஃப்தி முகம்மது சாதிக் (ரலி) அவர்கள் 1917 இல் இங்கிலாந்து செல்வதற்காக பயணத்தை துவங்கினார்கள். உலகப் போர் காரணமாக கடற்பயணம் மிக அபாயகரமானதாக இருந்தது. வழியில் கப்பலின் மாலுமி, ஜெர்மன் கப்பல்களின் இலக்கில் நமது கப்பல் உள்ளது. எனவே எப்போது கப்பல் மூழ்கும் எனத் தெரியாது என்று அறிவித்தார். பயணிகள் இதைக் கேட்டதும் பயத்தில் பதற்றமடைந்தனர். முஃப்தி சாஹிப் மிக வேதனையுடன் துஆ செய்தார்கள். இரவில் அவர்களது கனவில் ஒரு வானவர் தோன்றி சாதிக்! இந்த கப்பல் பாதுகாப்பாக சென்றடையும் நம்பிக்கை கொள் எனக் கூறியதைக் கேட்டார்கள். அன்னார் இந்த நற்செய்தியை உடனே பயணிகளிடம் தெரிவித்தார்கள். சூழ்நிலையோ மிகவும் மோசமாக இருந்தது. சுற்றியுள்ள கப்பல்கள் எல்லாம் உருக்குலைந்து அதன் மரத்துண்டுகள் கடலில் நீந்தியவாறு காட்சியளித்தன. ஆனால் முஃப்தி சாஹிப் பயணித்த கப்பலோ பாதுகாப்பாக செல்ல வேண்டிய இடத்திற்கு சென்றடைந்தது. *(சாதிக் பைத்தி பாகம் 1, தொகுப்பு முஷ்தாக் அஹ்கா லக்னோவி பக்கம் 21-22)*





ஹஸ்ரத் மவ்லானா குலாம் ரஸூல் ராஜிகி (ரலி) அவர்கள் பாகல் பூருக்கு ஒரு பிரசார மாநாட்டிற்காக சென்றிருந்தார்கள். திடீரென கருமேகம் சூழ்ந்து பெரும்பெரும் துளியாக மழை பொழியத் துவங்கியது. மாநாட்டின் இடையூறைக் கருத்தில் கொண்டு அவர்கள் மிக உருக்கத்துடன் துஆ செய்தார்கள். பார்த்துக் கொண்டிருக்கும் போதே வானம் தெளிவாகி விட்டது. மாநாடும் வெற்றிகரமாக நடைபெற்றது. *(ஹயாத்தே குத்ஸி, பதிப்பு 1954. ஹைதராபாத். தக்கன் பாகம் 3, பக்கம் 25-26)*

மவ்லானா நதீர் அஹ்மது முபஷ்ஷிர் அவர்கள் கானாவில் இருந்தார்கள். எதிரிகள் உண்மையில் இமாம் மஹ்தி வந்து விட்டார்களென்றால் பிறகு நில நடுக்கம் வந்திருக்க வேண்டுமே என விஷயத்தை வேறு விதத்தில் கொண்டு சென்றனர். இது உண்மைக்கான அளவு கோலோ அல்லது முன்னறிவிப்போ அல்ல. இருந்தும் அன்னார் பணிவுடன், ஆற்றல் மிக்க இறைவா! நீ உனது வல்லமையின் அடையாளத்தை வெளிப் படுத்துவாயாக என துஆ செய்தார்கள். வல்லமைமிக்க இறைவன் நிகழ்த்திய அற்புதத்தைப் பாருங்கள்! ஒரு சில நாள்களுக்குள்ளேயே முழு கானாவின் நிலப்பரப்பும் கடுமையான நிலநடுக்கத்தால் குலுங்கியது. இவ்விஷயம் அதிகமானவர்கள் நேர்வழி பெறுவதற்கு காரணமாக அமைந்தது. *(ருஹ்பர்வர் யாதேன். பக்கம் 77-79)*

உயிர்த்துறக்கும் நிலையிலிருந்த நோயாளிள் நலம் பெற்றது, துன்பங்களிலிருந்து விடுதலை, இழப்பிலிருந்து பாதுகாப்பு மற்றும் துஆக்களின் அருளால் அசாதாரண உதவிகள், ஆதரவுகள் போன்ற சம்பவங்கள் எண்ணிக்கையில் அடங்காதவை. பார்ப்பவர்கள் பல கேட்பவர்களும் நம்பமுடியாத சம்பவங்களும் உள்ளன. அஹ்மதிய்யத்தின் உலகில் மழைத்துளியாக அனைத்து இடங்களிலும் பொழிந்து கொண்டிருக்கும் இவை உயிருள்ள இறைவனுடைய ஆற்றல்களின் உயிருள்ள அடையாளமாகும். இவை துஆ எற்றுக்கொள்ளப் பட்டதற்கான இறை ஞானங்களாகும். இவை அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியிருக்கும், துஆ ஏற்றுக் கொள்ளப்பட்டதற்கான அடையாளங்களாகும். அவற்றை அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கியுள்ளது. இச்சம்பவங்களின் விளைவாக அஹ்மதிகளுக்கு கிடைக்கப் பெற்றுள்ள இன்பமும் ஈமானின் வலுவும் மற்றவர்களுக்கு எங்கே கிடைத்துள்ளது?

முடிவுரை

இவைதான் அஹ்மதிய்யத் உலகிற்கு வழங்கிய செல்வங்களாகும். இவைதான் அஹ்மதிய்யத் வழங்கிய ஆன்மீக அருட்கொடைகளும், அருள்களுமாகும். நிலைத்திருக்கும் இந்த இனிப்பான சந்திப்பு மற்றும் தித்திக்கும் அமிர்தத்தை அஹ்மதிய்யத் நான்கு திசைகளிலும் விநியோகித்துள்ளது.

அஹ்மதிய்யத்தின் உயிர் தியாகிகளே! இன்று நீங்கள் இந்த அருட்கொடைகளின் பாதுகாவலர்களாவீர்கள். நம்பி ஒப்படைக்கப்பட்ட இந்த உரிமையை நன்றாக நிறைவேற்றுங்கள். அமைதியிழந்து சோர்வுடன் காணப்படும் மனிதயினத்திற்கு குணமளிக்கும் அமிர்தம் உங்களது கைகளில் தரப்பட்டுள்ளது. உலகம் ஆன்மீக மரணத்தின் விளிம்பில் நிற்கின்றது. உலக மக்களை இன்று இந்த அழிவிலிருந்து ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அடிமைகளை தவிர வேறு எவராலும் காப்பாற்ற இயலாது. எனவே ஈருலகத்திற்கும் அருட்கொடையாக விளங்கும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு நன்றியுள்ள அடிமைகளே! எழுந்திருங்கள். வழிகேடு மற்றும் இருளின் வழியில் தடுமாறித்திரியும் மனிதயினத்திற்காக உங்களது உடல், உள்ளம், உயிர் அனைத்தையும் தியாகம் செய்து விடுங்கள். உங்களது வேதனைமிக்க துஆவினால் இதன் விதியை தட்டியெழுப்புங்கள். முழு மனிதயினத்திற்காகவும் அருள் எனும் அடைமழையாக ஆகிவிடுங்கள்.

ஆனால் நினைவில் கொள்ளுங்கள். உலகிற்கு வழங்கும் முன் நீங்கள் இந்த அருட்கள், கொடைகள் மற்றும் நன்மைகளின் மூலம் உங்களது உள்ளங்களை ஒளிமயமாக்கிக் கொள்ளுங்கள். அப்போதுதான் இந்த ஆன்மீகக் கருவூலங்களை அடுத்து வருபவர்களிடம் கொண்டு சேர்க்கும் பணியை நிறைவேற்ற முடியும். இப்போது உங்களிடம் ஒப்படைக்கப்பட்ட இந்த சுமை உங்கள் தோள்களில் உள்ளது. நீங்கள் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அடிமைகளாவீர்கள். இந்தத் தகுதியை கவனத்தில் கொண்டு இந்த கருவூலங்களை உலகின் எல்லை வரை எட்டவைத்துக் கொண்டே செல்லுங்கள். இந்த செல்வங்களும் கொடைகளும் அருட்களும் ஒரு போதும் முடிவடையாதவையாகும்.





நினைவில் கொள்ளுங்கள்! இந்த அருட்களின் மூலம் மட்டுமே உலகின் விதி மாறும். மேலும் நிச்சயம் உலகம் ஒரு நாள் மனிதயினத்தின் கருணையாளரான ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அடிமையாகி எல்லா துன்பங்களிலிருந்தும் ஈடேற்றம் பெறும். இன்று இந்த சேவை செய்யும் வாய்ப்பு உங்களது பங்கில் வந்துள்ளது. நமது இறைவன் மகிழ்ந்து நம்மை தனது அருள் மடியில் அணைத்துக் கொள்ளும் வகையில் தியாக உணர்வுடன் இந்தப் பணியை நிறைவேற்றுங்கள். இந்த வாய்ப்பையும் நற்பேற்றையும் நம்மில் ஒவ்வொருவருக்கும் அல்லாஹ் வழங்குவானாக. ஆமீன்.

வஆகிரு தஃவானா அனில் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

*******